முதற் பதிப்பு : மார்ச், 1966
இரண்டாம் பதிப்பு : அக்டோபர், 1969
மூன்றும் பதிப்பு : நவம்பர், 1980
மீனாட்சி—173

**Gangaiyum Kaaviriyum**

Comparative Literary Study

By **RAGUNATHAN**



3rd Edition, November, 1980

விலை ரூ.5-00

116 Pages
10Pt. Letters
18X12.5 Cms
11.6 Kg D/C
Seshasayee White Printing paper
Box Board Binding
B. R. V. Press, 143, Big St,
Madras—600 005

MEENAKSHI PUTHAKA NILAYAM
60, West Tower Street, Madurai - 625001

Branch : 228, Triplicane High Road, Madras - 600 005

# பதிப்புரை

**ரகுநாதன்** என்ற பெயரில் எழுதி வரும் **திரு. சிதம்பர ரகுநாதன்** முந்திய தலைமுறையைச் சேர்ந்த மூத்த எழுத்தாளர். ஆற்றல் மிக்க எழுத்தாளரான இவரது கதைகள், நாவல்கள், இலக்கிய விமர்சனக் கட்டுரைகள், மற்றும் **'திருச்சிற்றம்பலக் கவிராயர்'** என்ற புனைபெயரில் இவர் இயற்றியுள்ள கவிதைகள் முதலியவை அவற்றின் தனித்த முத்திரையினால், இவருக்கு இலக்கிய உலகில் ஒரு சிறப்பான ஸ்தானத்தைத் தேடிக் கொடுத்துள்ளன.

இவரது 'பஞ்சும் பசியும்' என்ற நாவலே தமிழ் மொழியிலிருந்து முதன் முதலில் ஐரோப்பிய மொழியொன்றில் (செக் மொழியில்) மொழி பெயர்த்து வெளியிடப்பட்ட முதல் தமிழ் நாவலாகும். மேலும் இவரது கதைகள் பலவும் செக், ஹங்கேரியன், ஜெர்மன், போலிஷ், ரஷ்யன் போன்ற மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**புதுமைப்பித்தனின்** நெருங்கிய நண்பரான இவர், அவரது படைப்புக்களைத் தொகுத்துப் பல தொகுதிகளாக வெளிக் கொணர உதவியதோடு, **புதுமைப்பித்தனின்** வாழ்க்கை வரலாற்றையும் மிகவும் போற்றத்தக்க முறையில் நூலாக எழுதி வழங்கியுள்ளார். **புதுமைப்பித்தனின்** இலக்கியப் பரம்பரையில் பூத்த மலராக விளங்கிய இவர், தமிழ்நாட்டில் முற்போக்கு இலக்கியப் படைப்புக்களுக்கும் முன்னோடியாக விளங்கியுள்ளார். இவரது இலக்கியப் பணிகளைப் பாராட்டி, இவருக்கு சோவியத் நாடு வழங்கும் நேரு நினைவுப் பரிசும் இருமுறை வழங்கப்பட்டுள்ளது. இப்பரிசைப் பெற்ற வெற்றியாளர் என்ற முறையில் இவர் சோவியத் நாட்டுக்கும் சென்று வந்துள்ளார்.

ஒப்பிலக்கிய நூல்கள் அரிதாகவே வெளிவரும் தமிழ் இலக்கிய உலகில் மகாகவிகளான பாரதியையும் தாகூரையும் சமுதாயக் கண்ணோட்டத்தில் ஒப்புநோக்கி ரகுநாதன் அவர்கள் எழுதியுள்ள இந்நூலை மீண்டும் வெளியிடுவதில் நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். இதனைத் தொடர்ந்து இவரது பிற நூல்களின் மறு பதிப்புக்களும் மற்றும் புதிய படைப்புக்களும் எங்கள் வெளியீடாகத் தொடர்ந்து வெளிவரும் என்பதையும் மகிழ்வோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

மதுரை
14—11—80

**செ. செல்லப்பன்**

## பொருளடக்கம்

# முன்னுரை

சில ஆண்டுகளுக்கு முன்னுல் மகாகவி ரவீந்திரநாத் தாகூரின் நூற்றுண்டு விழா இந்திய நாட்டில் மட்டுமல்லாது, உலகின் பல நாடுகளிலும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டதை நாமறிவோம். இந்தச் சந்தர்ப்பத்தில் அகில இந்திய சமாதானக் கமிட்டியினர் உலகத்தின் பல்வேறு நாடு களைச் சேர்ந்த கலைஞர்களையும் எழுத்தாளர்களையும் வரவழைத்து, 1961-ம் ஆண்டின் இறுதியில் கல்கத்தா நகரில் மாபெரும் ''தாகூர்—கலை இலக்கியத் திருவிழா'' ஒன்றை நடத்திஞர்கள். ஒன்றரை ஆண்டுக் காலம் திட்ட மிட்டு, சுமார் இரண்டு லட்ச ரூபாய் செலவிட்டு, அந்த விழாவைப் பன்னிரண்டு நாட்கள் நடத்திஞர்கள். அவ்விழா வுக்குச் சென்ற தமிழகத்து எழுத்தாளர்களில் நானும் ஒரு பிரதிநிதியாகச் சென்று, அதனைக் கண்டேன்; களித் தேன். விழாவுக்குப் பின்னர் வங்கத்திலுள்ள தமிழ்ப் பெருமக்கள் நடத்தி வரும் சங்கங்கள் எங்களுக்களித்த வரவேற்பில் பேசும்போது நான் பின்வருமாறு குறிப்பிட் டேன்: ''தாகூர் நூற்றுண்டு விழாவில் கலந்து கொள்ள வந்தவன் நான். இந்த அற்புதமான விழாவைக் கண்டேன்; களித்தேன். கவிஞரான தாகூருக்குச் செய்யும் இத்தகைய கௌரவத்தைக் கண்டு, இந்தியன் என்ற முறையில் நான் பெருமை கொள்கிறேன். தமிழன் என்ற முறையிலோ பொருமை கொள்கிறேன்!''

இவ்வாறு நான் குறிப்பிட்டபோது, நமது மகாகவி சுப்ரமண்ய பாரதியை மனத்தில் கொண்டுதான்

குறிப்பிட்டேன். பாரதியின் பெருமையை நாம் பூரணமாக உணரவும் இல்லை, உலகுக்கு உணர்த்தவும் இல்லை என்பதே என் கருத்து. இந்த எண்ணத்தில் எழுந்த தர்மாவேசமான பொறுமை உணர்ச்சியே என்னுள் கிளர்ந்தது. இந்தப் பொறுமையுணர்ச்சியில் நியாயத்தன்மையும் உண்டென நான் கருதுகிறேன். சொல்லப்போனால் அந்த நியாயத் தன்மையை வலியுறுத்தும் சிறு முயற்சியே இந்நூல் எனலாம். ஆம், இந்த நூல் இந்திய நாடு கண்ட இரு பெரும் தேசிய மகாகவிகளான தாகூரையும் பாரதியையும் ஒப்பு நோக்குகின்ற ஒரு விமர்சனமேயாகும். மேலும் பாரதியைப் பற்றி நான் எழுதத் திட்டமிட்டுள்ள நூல் வரிசையில் இதுவும் ஒன்றாகும். பாரதியின் புதுமையும் புரட்சியும் மிகுந்த கவிதைகளுக்கு முதற் பெரும் ஞான பிதாவாக விளங்கும் ஷெல்லியையும், பாரதியையும் ஒப்பு நோக்கும் எனது நூல் (பாரதியும் ஷெல்லியும்) ஏற்கெனவே வெளிவந்துள்ளது.

தாகூர், பாரதி ஆகிய இரு பெருங் கவிஞர்களிடமும் எனக்கு இளமை முதலே மிகுந்த ஈடுபாடும் மதிப்பும் உண்டு. மேற்குறித்த தாகூர் நூற்றாண்டு விழா நடைபெற்ற 1961-ம் ஆண்டில் நான் தாகூரின் நூல்களை மீண்டும் ஒருமுறை படிப்பதை எனது அவ்வாண்டுக் கடமைகளில் ஒன்றாகக் கொண்டிருந்தேன். அத்துடன் தாகூரைப் பற்றி வெளிவந்துள்ள நூல்களையும் விமர்சனங்களையும் தேடிப் பிடித்து படித்து வந்தேன். அவ்வாறு படிக்கும்போதே, தாகூரையும் பாரதியையும் ஒப்பு நோக்கி ஆராய்ந்தும் வந்தேன். இதனை அறிய வந்த எனது மதிப்புக்குரிய, தலை சிறந்த பாரதி அன்பரான அமரர் ஜீவா அவ்விருவரையும் ஒப்பு நோக்கித் தமது 'தாமரை'ப் பத்திரிகையின் பாரதி மலருக்கு ஒரு கட்டுரை எழுதுமாறு என்னைக் கேட்டுக்கொண்டார். எனவே அந்தப் பத்திரிகையின் பக்க வரம்பு அனுமதிக்கும் அளவுக்குத் 'தாகூரும் பாரதியும்' என்ற தலைப்பில் ஒரு சிறு

கட்டுரை எழுதினேன். அதில் நான் கண்ட பிரதானமான முடிவுகளையெல்லாம் தொட்டுக் காட்டத்தான் முடிந்தது. இதன் பின்னர் அதே ஆண்டில் எட்டையபுரத்தில் நடந்த பாரதி விழாவிலும், வேறு பல இடங்களில் நடந்த விழாக் களிலும் இதே விஷயத்தைக் குறித்துச் சொற்பொழிவாற்றி னேன். அந்தக் கட்டுரையையும், சொற்பொழிவையும் இலக்கிய அன்பர்கள் நன்கு வரவேற்ருர்கள். மேலும் அவர் களில் பலரும் எனது விமர்சனத்தை விரிவாக எழுதுமாறு கேட்டுக் கொண்டார்கள். அந்தத் தூண்டுதலின் விளைவே இந்நூல்.

பாரதியையும் தாகூரையும் மிகவும் விரிவாக ஆராய்ந்து இருவரின் பல்வேறுபட்ட படைப்புக்களையும், பக்குவப் பாட்டையும், ஒப்புநோக்கிப் பெரியதொரு நூலை ஆக்கு வதற்கு விஷயமும் உண்டு; அதற்கான அவசியமும் உண்டு. அந்த அளவுக்கு விரிவாக எழுத ஆர்வம் இருந்தாலும், இந்த நூல் எனது இலக்கிய திருஷ்டி, காலக் குரலோடு ஒட்டிக் கவிதைப் படைப்பைக் காணும் கண்ணோட்டம் ஆகிய வற்றின் நோக்கில் சில பிரதானமான விஷயங்களை மட்டும் சுட்டிக்காட்டும் விமர்சனமாகவே அமைந்துள்ளது எனலாம். பாரதியாரைப் பொறுத்த வரையில் அவர் இலக்கிய கர்த்தா வாக மட்டுமல்லாமல்' அரசியல் வாதியாகவும் திகழ்ந்தார். 'நமக்குத் தொழில் கவிதை; நாட்டிற்குழைத்தல்' என்ற அவரது மணிவாக்கில் அவர் இலக்கியத்தையும் அரசிய லையும் இணைத்தே காண்கிருர். இந்த வாக்குக் கொப்ப, அவரிடத்தில் நாடும் மொழியும், அரசியலும் இலக்கியமும் பின்னிப் பிணைந்தே இருந்தன. அவற்றைப் பிரித்துக் காண்பதற்கில்லை. காண முயல்வது பாரதியை உடல்வேறு உயிர்வேறு எனப் பிரித்து, வைத்து ஆராய்வது போலத்தான் இருக்கும். இந்த உண்மையை நெஞ்சில் நிறுத்திக் கெண்டுதான் நான் இந்த ஒப்பு நோக்கு விமர்சனத்தை எழுதியுள்ளேன். இதுவே இந்த விமர்

சனத்தின் அடிப்படை நோக்கும் போக்குமாக உள்ளது என்று சொல்லலாம்.

இந்த நூலில் நான் தெரிவித்துள்ள கருத்துக்களிலும், கண்டுள்ள முடிவுகளிலும் கருத்து வேற்றுமை கொள்ப வர்கள் இருக்கலாம். அவற்றை மறுப்பவர்களும் வெறுப்ப வர்களும் இருக்கலாம். எனினும் நான் கொண்டுள்ள கருத்துக்கள், கண்டுள்ள முடிவுகள் ஆகியவற்றுக்குத் துணை நின்ற ஆதாரங்கள், மேற்கோள்கள் ஆகியவற்றை நான் போதுமான அளவுக்கு வழங்கியுள்ளேன் என்றே கருதுகிறேன். எவ்வாறுயினும் இந்நூலில் இலக்கிய நேயர்கள் தமது சிந்தனையைத் தூண்டும் பல புதிய, துணிந்த கருத்துக்களை நிச்சயம் காண்பார்கள் என்பதே என் நம்பிக்கை.

மார்ச், 1966 **ரகுநாதன்**

# 1

## கங்கையும் காவிரியும்

கங்கையும் காவிரியும் நமது பாரத நாட்டின் புனித மான சப்த நதிகளில் இரண்டாகும். இந்த இரு மகா நதி களுக்கும் பல ஒற்றுமைகள் உண்டு. கங்கை நதி வங்க நாட்டைப் பொன் விளையும் பூமியாக மாற்றினால், காவிரி நதி தமிழகத்தைச் செந்நெற் களஞ்சியமாகச் செழிக்கச் செய் கிறது. மேலும் இந்த இருபெரும் நதிக்கரைகளிலும் விளைந்த நாகரிகங்களும் தொன்னெடுங்காலப் பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் தன்னுட்கொண்டு, வளம் மிகுந்த நாற்றங் காலில் பசை பிடித்து வளரும் பயிரைப் போன்று, வளர்ந்து செழித்துப் பரிணமித்து வந்துள்ளன. கலை, இலக்கியம், சமயம், தத்துவம், தேசியம் முதலிய பல்வேறு துறைகளிலும் இந்த இரு நதிக்கரைகளிலும் வாழ்ந்த மக்கள் நிறைந்த சிந்தனைகளையும், நிலைத்த படைப்புக்களையும் இந்த நதிகளைப் போலவே வற்றாது வழங்கி வந்திருக்கிறார்கள். வடநாட்டில் பிறந்து வங்க மாநிலத்தைச் செழிக்கச் செய்து பாயும் கங்கையும், தென்னாட்டில் பிறந்து தமிழ் நிலத்தைச் செழிக்கச் செய்யும் காவிரியும் இறுதியில் பாரதம் முழு மைக்கும் சொந்தமான வங்காள விரிகுடாக் கடலில் சென்று கலக்கின்றன. இவ்வாறு வங்காள விரிகுடாவில் பாய்ந்து,

கடலோடு கடலாய்ச் சங்கமமாவதன் மூலம் அகில உலகையும் அரவணைத்து நிற்கும் பஞ்ச மகா சமுத்திரங் களோடும் ஐக்கியமாகி, இந்தப் பாரகத்துக்கே சொந்தமாகி விடுகின்றன.

இந்த இரு பெரும் நதிகளையொத்த இரண்டு கவிஞர்கள் பாரத மண்ணில் இந்த நூற்றாண்டில் வாழ்ந்து சென்றார்கள். ஒருவர் ரவீந்திரநாத தாகூர்; மற்றவர் சுப்ரமண்ய பாரதியார். இருவரும் இந்திய நாடு பெற்றெடுத்த தவச் செல்வங்கள்; இந்த நூற்றாண்டின் தலைசிறந்த இந்திய இலக்கிய மாமேதைகள்; உலகம் அனைத்தையும் அரவணைத்துத் தழுவிய மனிதாபிமானிகள்; சிறந்த சிந்தனைவாதிகள்; எல்லாவற்றுக்கும் மேலாக, இந்த மண்ணில் காலூன்றி நின்று, இந்திய தேசிய மறுமலர்ச்சியோடு இணைந்து மலர்ந்த மகா கவிகள். வங்கத்தில் தோன்றி வங்க மொழியில் சிறந்த கவிதை களைப் படைத்த தாகூரும், தமிழகத்தில் தோன்றித் தமிழ் மொழியில் சிறந்த கவிதைகளைப் படைத்த பாரதியும் அந்தந்த மொழி பேசும் மாநிலத்தவர்க்கு மட்டும் சொந்த மானவர்களல்ல. 'செப்பு மொழி பதினெட்டுடையாள்' எனினும், 'சிந்தனை ஒன்றுடையா'ளான பாரதத் தாய்க்கு இருவரும் பொதுவான புத்திர பாக்கியங்கள். சொல்லப் போனால், இருவரும் அகில உலகத்துக்குமே சொந்தமான உலக மகா கவிகள்.

தம் வாழ்நாளின் ஆக்கசக்தி மிகுந்த செம்பாதிக் காலத்தை இந்த நூற்றாண்டில் வாழ்ந்து முடிந்து போன இந்த இருபெருங் கவிஞர்களையும் ஒப்பு நோக்கி, ஒற்றுமை வேற்றுமை கண்டு, விரிவாகவும் நுணுக்கமாகவும் ஆராய வேண்டியது இன்றைய இலக்கியத் தேவைகளுக்கு அவசியமானதாகும். எனினும் வங்க மொழியிலும் தமிழ் மொழியிலும் போதிய பாண்டித்யமும், இருவரது மூல நூல்களில் நிறைந்த பயிற்சியும், இலக்கிய வரலாற்று,

விமர்சனத் துறைகளில் தீர்க்கமான, தெளிவான கண்ணோட்டமும் ஒருசேரப் பெற்றவர்களால்தான் இந்தத் தேவையைத் திறமையாகவும் முழுமையாகவும் பூர்த்தி செய்ய முடியும். ஆனால் இன்றைய நிலையில் அத்தகைய வாய்ப்பு நம்முன் உள்ளதா என்பது சந்தேகம்தான். தமிழர்களான நாம் தாகூரின் படைப்புக்களைத் தமிழ் அல்லது ஆங்கில மொழி பெயர்ப்புக்களின் மூலமே அறிந்திருக்கிறோம். தாகூரின் நூல்கள் சில தமிழில் வெளிவந்துள்ளனவெனினும், கணிசமான அளவுக்கு எதுவும் வந்துவிடவில்லை. ஆங்கிலத்தில் அவரது நூல்கள் பல வெளிவந்துள்ளன. எனினும் ஆங்கில மொழி பெயர்ப்புக்கும் ஆளாகாமல், வங்க மொழி மூலத்திலேயே யுள்ள படைப்புக்களும் பல உண்டு என்றும் தெரிய வருகிறது. எனவே இன்றைய நிலையில் ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளிவந்துள்ள தாகூரின் படைப்புக்கள், தாகூரைப் பற்றியும் அவரது படைப்புக்களைப் பற்றியும் வெளிவந்துள்ள நூல்கள், பத்திரிகைக் கட்டுரைகள், மற்றும் ஆங்காங்கே தென்படக்கூடிய குறிப்புக்கள் ஆகியவற்றின் துணை கொண்டுதான் தாகூரை நாம் தெரிந்து கொள்ள முடியும். அந்த அறிவைக் கொண்டு தாகூரையும் பாரதியையும் ஒப்பு நோக்கிக் காணும் பணியை மேற்கொள்ள முடியும். ஆனால் இந்தப் பணியும் குறிப்பிட்டுச் சொல்லும் அளவுக்குத் தமிழகத்தில் ஓரளவுக்கேனும் நடந்திருப்பதாகத் தெரியவில்லை. இவ்விஷயத்தில் இலக்கிய நோக்கிலும் போக்கிலும் என்னோடு பெரும்பாலும் ஒத்த கருத்தும் கண்ணோட்டமும் கொண்ட எனது நண்பரும், இலங்கையைச் சேர்ந்த பிரபல எழுத்தாளருமான டாக்டர் க. கைலாசபதிதான் முன்னோடியாக விளங்கியுள்ளார். தாகூரின் நூற்றாண்டு விழாவையொட்டி, 'மகாகவி கண்ட மகாகவி' என்ற தலைப்பில், அவர் தாம் ஆசிரியராகவிருந்த 'தினகரன்' பத்திரிகையில் சில கட்டுரைகளை எழுதி வெளியிட்டார். அவை 'இரு மகாகவிகள்' என்ற தலைப்பில் புத்தகமாகவும் வெளி வந்துள்ளன. பாரதியையும்

தாகூரையும் ஒப்பு நோக்கி அவர் படைத்துள்ள இந்தச் சிறந்த நூல் நம்மனைவரின் பாராட்டுக்கும் கவனத்துக்கும் உரியதாகும். எனினும் இவ்விரு கவிஞர்களையும் பற்றி மேலும் விரிவாகவும் ஆழமாகவும் ஆராய்ந்தாக வேண்டும். இந்தச் சிறு நூலில் அதற்கு நிச்சயமாக இடமில்லை. எனினும் இந்த இரு பெருங் கவிஞர்களின் ஒட்டு மொத்த மான ஒற்றுமைப் பாங்கைத் தொட்டுக் காட்டுவதும், குறிப்பான வேற்றுமைப் பாங்கைச் சுட்டிக் காட்டுவதும் தான் இந்நூல் மேற்கொள்ளும் பணியாகும். அதன் மூலம் இந்தக் கவிஞர்கள் இருவரையும் அறிந்தவர்கள், அறிய விரும்புபவர்கள் ஆகிய இலக்கிய அன்பர்களின் சிந்தனையைத் தூண்டி விடுவதே இந்நூலின் நோக்கம்.

## வாழ்க்கையும் வாய்ப்பும்

தாகூரையும் பாரதியையும் மேலோட்டமாகப் பார்க்கின்றபோது, அவர்கள் இருவரது வாழ்க்கையிலும். வாழ்க்கையில் கிட்டிய வாய்ப்புக்களிலும், சாதனைகளிலும் காணும் ஒற்றுமைகளைக் காட்டிலும் வேற்றுமைகளே நம் மனத்தில் சட்டென்று தோன்றும். தாகூர் சென்ற நூற்றாண்டின் பிற்பாதியில் 1861ம் ஆண்டில் (மே மாதம் 7ம் தேதி) தோன்றி, இந்த நூற்றாண்டின் முற்பாதியில் 1941ம் ஆண்டில் (ஆகஸ்டு மாதம் 7ம் தேதி) அமரரானவர். அதாவது கிட்டத்தட்ட நிறைவாழ்வு வாழ்ந்து, தமது எண்பதாவது வயது பூர்த்தியான பின்னர் பூதவுடலை நீத்தவர். ஆனால் பாரதியோ சென்ற நூற்றாண்டில் தாகூருக்குப் பின்னர் 1882ம் ஆண்டில் (டிசம்பர் 11ம் தேதி) தோன்றி, இந்த நூற்றாண்டில் தாகூருக்கு முன்பே, தமது நாற்பதாவது வயது பூர்த்தியாகு முன்பே 1921ம் ஆண்டில் (செப்டம்பர் 11ம் தேதி) அற்பாயுளில் நம்மை விட்டுப் பிரிந்து அமரரானவர். எனவே இருவருடைய ஆயுட் காலத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, தாகூரின் ஆயுட் காலத்தில் சரிபாதிக் காலம்தான் பாரதியின் ஆயுட்கலாம் என்பதை நாம் பார்க்கிறோம்.

அடுத்து இவர்கள் இருவரும் எழுதிச் சென்றுள்ள எழுத்துக்களின் அளவை, அதாவது தொகையைக் கவனித்தால் தாகூரின் எழுத்துக்கள் மகா சமுத்திரம் போல் அளவில் விரிந்து பரந்தவை என்பதைக் காண்கிறோம். எழுத ஆரம்பித்த காலம் தொட்டு, இந்த உலகை விட்டுப் பிரியும் நேரம் வரையிலும் அலுப்புச் சலிப்பின்றி அற்புதமான படைப்புக்களை எழுதி யெழுதிக் குவித்த தாகூரின் அசுர சாதனையைக் குறித்து வியக்காத விமர்சகர்கள் இல்லை. கவிதைகளை மட்டும் எடுத்துக் கொண்டால், தாகூர் ஆயிரத்துக்கு மேற்பட்ட கவிதை களையும் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட இசைப் பாடல் களையும் எழுதியுள்ளார் எனத் தெரிய வருகிறது. தாகூர் எழுதியுள்ள கவிதைகள், கவிதை நாடகங்கள் ஆகிய வற்றின் தொகை மட்டுமே ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் வரிகள் உள்ளனவென்றும், உலக மகாகவிகள்கூட இந்த அளவுக்கு அதிகமாக எழுதிவிடவில்லை யென்றும் தாகூரின் விமர்சகரான எட்வர்ட் தாம்ஸன் கூறுகிறார். ஆம், கம்பன், வால்மீகி, ஹோமர், மில்டன் முதலிய பாரகாவியங்கள் பாடிய உலக மகாகவிகள்கூட இந்த அளவெல்லையை எட்டிப் பிடிக்கவில்லை. தாகூரின் கவிதை களின் அளவோடு ஒப்பிடும்போது பாரதியின் கவிதைகள் அளவில் மிகவும் குறைந்தவைதாம். இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் பாரதியின் குறுகிய ஆயுட் காலத்தையும் மறந்து விடுவதற்கில்லை. எனினும், பாரதியைப் பல விதத்தில் ஒத்தவனும், ஆகர்ஷித்தவனுமான ஆங்கிலக் கவிஞன் ஷெல்லி (1792—1822) முப்பது வயதை எட்டிப் பிடிக்குமுன் னமே முடிந்துபோன போதிலுங்கூட அவன் எழுதியுள்ள கவிதைகளின் அளவுக்குக்கூட, பாரதியின் கவிதைகளின் அளவு இல்லை. பாரதியின் கவிதைகளின் அளவு குறைந்த தற்கு அவரது வறுமை வாழ்வும் ஒரு காரணம் எனச் சொல்ல வேண்டும். “பராசக்தீ! ஓயாமல் கவிதை எழுதிக் கொண்டிருக்கும்படி திருவருள் செய்ய மாட்டாயா?...

தாயே! என்னைக் கடன்காரன் ஓயாமல் வேதனைப்படுத்திக் கொண்டிருந்தால், நான் அரிசிக்கும் உப்புக்கும் யோசனை செய்து கொண்டிருந்தால்—உன்னை எப்படிப் பாடுவேன்?" என்பது பாரதி தமது தினசரிக் குறிப்பில் எழுதி வைத்துள்ள வாசகம் (பாரதி வசனம் : சித்தக்கடல்). மேலும் "எங்ஙனம் சென்றிருந்தீர்?" எனத் தொடங்கும் "கலை மகளை வேண்டுதல்", "கவிதைக் காதலி" முதலிய பாரதியின் கவிதைகள் "நமக்குத் தொழில் கவிதை" என்று முழங்கிய அந்த நாவலரின் படைப்புத் தொழில், வறுமையின் காரணமாக எவ்வாறு பாதிக்கப்பட்டது என்பதை விளக்கும் சான்றுகளாகும். எனவே தாகூரைப் போல் இடையறுது எழுதிக் குவிக்கக்கூடிய சூழ்நிலையில் பாரதி வாழவில்லை என்பது தெளிவு. நெருப்புக்கு மத்தியில் அமர்ந்து அரிகண்டம், எமகண்டம் பாடுவது போல், வறுமைக்கு மத்தியில் வாழ்ந்து, அந்த நெருப்பில் உருகிக் கரைந்து விடாமல் மேலும் மேலும் பதம் பெற்ற உருக்காகக் கனிந்தவராய், இவ்வளவு கவிதைகளைப் பாரதி எழுதி வைத்துச் சென்றதே பெரிய சாதனைதான். பாரதி தமது வாழ்க்கையின் இறுதிக் காலம் வரையிலும் வறுமையோடு போராடியவர். அதனுல் உடல் நலிந்ததோடு மட்டு மல்லாமல், சமயங்களில் உள்ளமும் சலித்து நொடித்தவர். ஆனுல் தாகூரோ வறுமையின் கொடுமையை வாழ்க்கையில் நேரடியாக அனுபவியாத பாக்கியசாலி ; அன்ன விசாரம் அற்ற அதிருஷ்டசாலி. அவருக்கும் பணத் தட்டுப்பாடு ஏற்பட்டதுண்டு. தாம் தொடங்கிய சாந்திநிகேதன் ஸ்தாபனத்துக்குப் பண நெருக்கடி ஏற்பட்ட காலத்தில் அவர் வீதியில் இறங்கி, நிதி வசூல் செய்தார் எனவும், அதற்காக வெளிநாடு சென்ருரெனவும் அறிகிருேம். எனினும் அரிசிக்கும் உப்புக்கும் ஆலாய்ப் பறந்து நெஞ்சுருகி நிற்க வேண்டிய நிலை தாகூருக்கு என்றும் நேரவில்லை ; நேர்வதற்கான சூழ்நிலையும் இல்லை.

காலஞ்சென்ற சிறந்த எழுத்தாளர் ஹுமாயூன் கபீர் சொல்வதுபோல், "தாம் பிறந்த இடம், காலம் இரண்டிலும்

தாகூர் அதிருஷ்டசாலியாக இருந்தார்." (தாகூரின் கவிதை — கட்டுரை) ஆம். இந்திய நாட்டின் தேசிய இயக்கத்துக்கும் தேசிய மறுமலர்ச்சியின் பல்வேறு துறைகளுக்கும் முன்னோடியாக விளங்கிய வங்க நாட்டில், இந்த விழிப்பும் எழுச்சியும் வங்கத்தில் சிறந்தோங்கி நின்ற காலத்தில், தாகூர் பிறந்து வளர்ந்தார். இன்று அடையாறு நாகரிகத்தோடு கலந்து முயங்கிக் கதிமோட்சம் எய்திவிட்ட பிரம சமாஜத்தின் ஆதிகர்த்தாவான ராஜாராம் மோகனராய் (1772—1833) அன்று இந்திய நாட்டு வேதங்களின் சார நுட்பங்களையும், கிறிஸ்தவத்தின் பரிவுணர்ச்சியையும் இணைத்து, பிரம சமாஜத்தைத் தோற்றுவித்தார். அந்தக் காலத்தில் பிரமசமாஜம் சமுதாயச் சீர்திருத்தத்துக்காகப் பாடுபட்டது; மூடப்பழக்க வழக்கங்களை எதிர்த்தது; 'சதி' என்னும் உடன்கட்டை யேறும் வழக்கத்தை எதிர்த்துப் போராடியது; அதனைத் தடை செய்வதில் வெற்றியும் கண்டது; ஜாதி வேற்றுமைகளையும் குழந்தை மணத்தையும் எதிர்த்துப் போராடியது. இவற்றின் காரணமாக அன்றைய வைதிகர்களின் கண்டனத்துக்கும், பகிஷ்காரத்துக்கும், தாக்குதலுக்கும் ஆளான முற்போக்கு இயக்கமாக அது திகழ்ந்தது. மேலும் இதே காலத்தில் ஈஸ்வர சந்திர வித்தியாசாகரர் (1820 — 1891) முதலியோர் பெண்ணுரிமைக்காகவும், பெண் கல்விக்காகவும் போராடினர். 1857ம் ஆண்டின் 'சிப்பாய்க் கலகம்' என ஆங்கிலேயர் பழித்த இந்திய சுதந்திர யுத்தம் நடந்து முடிந்த பின்னர், அதன் விளைவாக விம்மி விகசித்து வந்த தேசிய உணர்ச்சி, இந்தக் காலத்தில்தான் இந்தியத் தேசியக் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பிறப்புக்கான கருவைத் தன்னுள் தாங்கி வளர்த்து வந்தது. மேலும் இந்தக் காலத்தில்தான் மதுசூதன தத்தர் (1824—1873), வந்தே மாதர கீதத்தை அருளிச் செய்த பங்கிம் சந்திர சாட்டர்ஜி (1838—1894) முதலியோர் தமது இலக்கியப் படைப்புக்களின் மூலம் வங்க இலக்கிய மறுமலர்ச்சியை மணம் பெறச்செய்தார்கள்.

மேலும் மதத்துறையிலும் தேசியக் குணும்சமும் போராட்ட உணர்ச்சியும் மிகுந்த புதுமை வேதாந்தியாகத் திகழ்ந்த சுவாமி விவேகாநந்தரின் குருநாதரான ராமகிருஷ்ண பரமஹம்சர் (1836-1886) இந்து மதத்தை மனிதாபிமானக் கண்ணேட்டத்தோடு வலுப்பெறச் செய்து, மதத்துறையில் ஒரு புதிய விழிப்பை உண்டாக்கினுர். இந்தக் காலத்தில் தான் சுரேந்திரநாத் பானர்ஜி (1848-1925) போன்ற அறிஞர்களெல்லாம் அரசியல் தலைவர்களாக மாறி, தேசிய விழிப்பை மேலும் தூண்டிவிட்டார்கள். இளைஞர் சங்கங் களும், மாணவர் மன்றங்களும் வங்க நாட்டில் இந்தக் காலத்தில் பிறப்பெடுத்தன; இந்தக் கால கட்டத்தில்தான் கல்கத்தா சர்வகலாசாலை தோற்றுவிக்கப்பட்டது. இந்திய நாட்டின் நெடுந்தொலை நகரங்களுக்கிடையே ரயில் பாதைகள் போடப்பட்டு, இந்தியா இணைக்கப்பட்டது. மேலும் சூயஸ் கால்வாயையும் இந்தக் காலத்தில் வெட்டி முடித்ததால், இந்திய நாடு மேலை நாடுகளோடு சுருங்கிய தூரத்தில் நெருங்கிய தொடர்பு கொள்ள ஏதுவாயிற்று. "அறிவுத் துறைச் சக்திகளின் மோதல், விடாமுயற்சியிலும், விவேக முடிவிலும் துடிப்போடு ஈடுபட்டு வந்த காலம் அது. இந்திய சமுதாயத்தின் தோற்றமே அப்போது மாறி வந்தது. ஒரு புதிய கலாசார உத்வேகம் நாடு பூராவும் பரவிப் பாய்ந்தது...மேலை நாட்டு விஞ்ஞானமும், இலக்கிய மும், அரசியல் கருத்துக்களும், இந்தியரின் மனேவுணர்ச் சியைப் புனரமைத்துக் கொண்டிருந்தன" என்று இந்தக் காலச் சூழ்நிலைபற்றி டாக்டர் வி. எஸ். நாரவனே குறிப்பிடு கிருர் ('நிரந்தரப் பிரயாணி' - தாகூர் பற்றிய கட்டுரை). இவ்வாறு இலக்கியம், சமயம், தத்துவம், தேசியம், அரசியல் ஞானம் முதலிய பல்வேறு துறைகளிலும் இந்திய நாட்டுக்கே வழிகாட்டியாக, வங்க நாடு மறுமலர்ச்சி பெற்று வளர்ந்து நின்ற பருவத்தில்தான் தாகூர் பிறந்தார்.

பிறந்த நாட்டைப் போலவே பிறந்த வீட்டைப் பொறுத்த வரையிலும்கூட, தாகூர் பாக்கியசாலியாகத்

தான் இருந்தார். இத்தகைய மறுமலர்ச்சியில் பங்கெடுத்த குடும்பம் தாகூரின் குடும்பம். தாகூரின் தாத்தாவான துவாரக நாத தாகூர் (1794-1846) ராம் மோகன ராயின் உற்ற தோழராகவும் அவரது பிரமசமாஜ இயக்கத்தின் முக்கியஸ்தர்களில் ஒருவராகவும் இருந்தார். இதன் காரணமாக, தாகூரின் குடும்பமே வைதிகர்களின் கண்டனத்துக்கும், கோபத்துக்கும் ஆளாயிற்று. தாகூரின் தந்தையான தேவேந்திர நாத தாகூரும் ஒரு பிரமசமாஜி தான். எனவே தாகூரின் குடும்பமே ஒரு மறுமலர்ச்சிக் குடும்பமாகத் திகழ்ந்தது. அந்தக் குடும்பத்தில் வங்காளம், சமஸ்கிருதம் முதலிய மொழி நூல்கள் மட்டுமல்லாமல், பாரசீக இலக்கியங்கள், மேலை நாட்டு இலக்கியங்கள் முதலியனவும் கற்கப்பட்டன; விவாதிக்கப்பட்டன. அத்துடன் ரசாயனம் போன்ற பல்வேறு விஞ்ஞானப் பாடங்களும்கூட அங்கு கற்கப் பெற்றன. மேலும் அந்தக் குடும்பத்திலுள்ளவர்கள் தமக்குள் தாமே ஒரு நாடகக் குழுவை உருவாக்கி, நாடகங்களை நடித்தார்கள்; தமக்குத் தாமே "தத்வ போதினி பத்ரிகா" என்ற பத்திரிகையையும் நடத்தினார்கள். தாகூரின் பெரிய அண்ணனை துவிஜேந்திர நாத தாகூர் பிரபலமான தத்துவ வாதியாகவும், அறிஞராகவும் அன்று விளங்கினார். தாகூரின் சகோதரியான ஸ்வர்ண குமாரி அந்தக் காலத்தில் பிரபலமான வங்க எழுத்தாளியாக இருந்தார். மேலும் தாகூரின் குடும்பம் பரம்பரையான பணக்காரக் குடும்பம். இந்திய நாட்டிலிருந்து முதன் முதலில் கடல் கடந்து சீமைக்கு—அதாவது இங்கிலாந்துக்குச்—சென்று வந்த குடும்பங்களில் தாகூரின் குடும்பமும் ஒன்றாகும். தாகூரின் சின்ன அண்ணனை சத்தியேந்திர நாத தாகூர்தான் இந்தியாவில் அந்தக் காலத்தில் ஆகப்பெரிய அதிகாரப் பட்டமாகக் கருதப்பெற்ற ஐ. சி. எஸ். பட்டம் பெற்று வந்து, முதன்முதலில் பதவி வகித்தவராவார். இவ்வாறு "பொருந்து செல்வமும் கல்வியும் பூத்த"தொரு பெரிய குடும்பத்தின் எட்டாவது ஆண் குழந்தையாகப் பிறந்த

தாகூர், அந்தச் சூழ்நிலையில் தமது எட்டாவது வயதிலேயே தமது முதற் கவிதையை எழுதிவிட்டாரென்றால், அதில் ஆச்சரியப்படுவதற்கு ஏதுமில்லை. மேலும் அவரது கவிதைத்திறனை வளர்த்துப் பரிணமிக்கச் செய்யவும், அவரது குடும்பச் சூழ்நிலை சாதகமாக இருந்தது. தாகூர் பாலியத்தில் தாமியற்றிய கவிதைக்குத் தாமே இசையமைத்துப் பாடியதைக் கேட்ட தாகூரின் தந்தை மகிழ்ச்சியுற்று, தம் மகனுக்கு ஐநூறு ரூபாய் பரிசளித்தார் என்று சாந்தவன குமார தாஸ் என்ற கட்டுரையாளர் குறிப்பிடுகிறார்.

பாரதி பிறந்து வளர்ந்த சூழ்நிலையோ நாம் அறிந்தது தான். பூர்விகக் கிராமமான சீவலப்பேரியை விட்டு, ஜீவனோபாயத்தையும் மேம்பாட்டையும் கருதி எட்டயபுரம் ஜமீன்தாரின் ஆதரவை நாடி எட்டயபுரத்துக்குக் குடிவந்து வாழ்ந்த, மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த சின்னச்சாமி ஐயருக்குப் புதல்வராகப் பிறந்தவர் பாரதி. சின்னச்சாமி ஐயருக்கோ தம் புதல்வனைக் கணிதப் புலவனாக்க வேண்டுமென்ற எண்ணம். எனவே "வேண்டு தந்தை விதிப்பினுக்கு அஞ்சி"த்தான் பாரதி பாலியத்தில் கணக்கோடு மாரடிக்க நேர்ந்தது. கவிதை பாடுவதில் பாரதிக்கிருந்த ஆர்வத்தையுணர்ந்து, அவரை அந்தத் திசையில் வளர்ப்பதற்குச் சின்னச்சாமி ஐயர் முயலவில்லை. இளமையில் பாரதி எட்டயபுரத்திலிருந்த புலவர் பெருமக்களோடு தம் தந்தைக்குத் தெரியாமல்தான் தொடர்பு வைத்திருந்தார். அந்தப் புலவர்களும் எப்படிப்பட்டவர்கள்? "சின்னச் சங்கரன் கதை"யில் பாரதியே சொல்வது போன்று, "ஒரு பாட்டில் எத்தனைக் கெத்தனை அசுத்தமான வார்த்தைகள் சேர்கின்றனவோ, அத்தனைக் கத்தனை சுவையதிகமென்பது கவுண்டனூர்ப் புலவர்களின் முடிவு" என்ற தகுதி பெற்றவர்கள்தான். இவ்வாறு காமரச மஞ்சரியாய் ஜமீன்தாருக்கு லாலி பாடி வந்த ஆஸ்தானப் புலவர்களின் மத்தியிலும், கோழிச் சண்டை விடுவதிலேயே

பொழுதைக் கழிக்கும் பிற்போக்கான ஜமீன்தாரியின் 'அகழி முதலைச்' சூழ்நிலையிலும்தான் பாரதி முதன் முதலில் கவி பாடத் தொடங்கினார். அதுவும் அந்தக் "கவுண்டனூர்ப் புலவர்"களைப்போலவேதான்! இதன் பின்னர் தமது பதினோராவது வயதில்தான் அவர் 'பாரதி' என்ற பட்டத்தைப் பெற்றார் என்று நாம் அறிகிறோம். இவ்வாறு இளமையிலேயே புலமைப்பட்டம் பெற்றாலும், அதனை நல்ல முறையில் வளர்க்கக்கூடிய சூழ்நிலையில் பாரதியின் குடும்பம் இல்லை. இளமையிலேயே திருமணம்; பிறகு தந்தைக்குத் தொழிலில் பெருத்த நஷ்டம்; அதனால் குடும்பத்தில் வறுமை; பின்னர் தந்தையின் மரணம்; அதனால் பாரதியின் படிப்புக்குப் பங்கம்—இத்தியாதிச் சூழ்நிலையில், தாய் தந்தை, சொத்து சுகம் யாவற்றையும் இழந்து மனம் நொடித்துப்போன சூழ்நிலையில், எட்டய புரத்தில் இருக்கப் பிடிக்காமல் காசியிலிருந்த தமது அத்தையை நாடிச் செல்லும் இளைஞன் பாரதியைத்தான் நாம் இருபதாம் நூற்றாண்டு பிறப்பெடுக்கும் சமயத்தில் பார்க்கிறோம்.

மேலும் தாகூர் தமது வாழ்நாட் காலத்தில் உலகத்தின் பல நாடுகளுக்கும் சென்று திரும்பியவர். பிரயாணம் செய்வதிலும், வெளிநாடுகளுக்குச் செல்வதிலும் அவருக்கு ஒரு மோகமே இருந்தது; அதற்கான வசதியும் இருந்தது. அவர் தமது பதினேழாவது வயதில், இங்கிலாந்திலிருந்த தம் தனயன் சத்யேந்திர நாத தாகூரிடம் சென்று, அங்குச் சில காலம் இருந்தார். இதன்பின்னர் அவர் பத்துத் தடவைகள் வெளிநாடுகளுக்குச் சென்று திரும்பியுள்ளார். இங்கிலாந்து, ஐரோப்பிய நாடுகளில் பெரும்பாலானவை, அமெரிக்கா, தென் அமெரிக்கா, சீனா, ஜப்பான், மலாயாத் தீவுகள், ஈரான், ஈராக், இலங்கை, சோவியத் ருஷ்யா முதலிய பல நாடுகளுக்கும் சென்று வந்தவர் அவர். பொதுவாகச் சொன்னால், உலகத்தில் தாகூரின் கால்படாத தேசங்கள் மிகச் சிலவே எனலாம். ஆனால், பாரதியோ? பெல்ஜியத்

தைப் பற்றியும், ருஷ்யாவைப் பற்றியும், 'ஆப்பிரிக்கத்துக் காப்பிரி நாட்'டைப்பற்றியும், 'தென்முனையடுத்த தீவுகள்' பலவற்றைப்பற்றியும், 'தெற்கு மாகடலுக்கு நடுவினிலே, அங்கோர் கண்ணற்ற தீவாக' விளங்கும் பீஜித்தீவைப் பற்றியும் பாரதியார் பாடல்கள் பாடியுள்ளாரே தவிர, அவர் இந்திய நாட்டின் எல்லையைத் தாண்டி அறியாதவர்; தாண்டிச் செல்ல வழியும் வகையும் அற்றுப் போனவர். தமது இலக்கிய வாழ்வின் செம்பாதிக் காலத்தை, புதுச் சேரியில் அடைக்கலம் புகுந்து, அந்தக் குறுகிய எல்லைக் குள்ளேயே அஞ்ஞாத வாசம் புரிந்து, நிர்ப்பந்த வசமாகக் கழிக்க நேர்ந்தவர். பாலியத்தில் தம் அத்தையை நாடிக் காசிக்குச் சென்றதும், பின்னர் காங்கிரஸ் மகாநாட்டில் கலந்துகொள்ளக் காசிக்குச் சென்றதும், வரும் வழியில் நிவேதிதாதேவியைச் சந்திப்பதற்காகக் கல்கத்தா சென்றதும், பின்னர் சூரத் காங்கிரசுக்குச் சென்றதும்தான் பாரதி மேற்கொண்ட வடநாட்டுப் பயணங்களாகும். தென் னாட்டில்கூட, பாரதி தமது சொந்தத் தாயகமான தமிழகத் தின் பல நகரங்களையும்கூடப் பார்த்ததாகத் தெரியவில்லை. இளமையில் எட்டயபுர மன்னரோடு திருநெல்வேலி ஜில்லா வின் சில இடங்களுக்குச் சென்று வந்ததைத் தவிர, பாரதி யின் வாழ்நாட் பயணம் முழுவதும் எட்டயபுரம், திருநெல்வேலி, மதுரை, சென்னை, புதுச்சேரி, கடையம் முதலிய ஊர்களிலேயே பெரும்பாலும் அடங்கிவிட்டது எனலாம். இவற்றைத் தவிர ஈரோடு, செட்டிநாடு போன்ற இடங்களும் தமிழகத்தில் அவரது திருப்பாதங்கள் பட்ட ஸ்தலங்களாகும். ஆரம்பகாலச் சென்னை வாசத்தின்போது விபின சந்திர பாலரை அழைத்து வருவதற்காக ராஜ மகேந்திர புரத்துக்குச் சென்றதும், பின்னர் கடைய வாசத்தின்போது திருவனந்தபுரம் சென்று வந்ததும் தான் அவரது அண்டை மாகாணப் பயணங்கள் எனலாம். எனவே பாரதி உலக நாடுகளைக் கண்டு களித்ததெல்லாம் தமது "ஞானரத"ப் பயணத்தின் மூலமாகத்தான்.

இத்தனைக்கும் மேலாக, தாகூருக்கு அவரது ஆயுட் காலத்திலேயே உலகப் புகழ் கிட்டிவிட்டது. "வெள்ளைய ரல்லாத ஒருவருக்கு இத்தகைய கௌரவத்தை வழங்கியது ஏனென்று வெளிநாட்டு எழுத்தாளர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை" என்றுகூட, அந்நாளில் அமெரிக்காவிலிருந்து வெளிவந்த 'ந்யூஸ்' (செய்தி) என்ற பத்திரிகை பொறுமை யோடு எழுதியதாக நாம் அறிகிறோம். அத்தகையதொரு கௌரவம் ஓர் ஆசிரியருக்கு, ஓர் இந்தியருக்குக் கிட்டியது. ஆம். தாகூர் எழுதிய 'கீதாஞ்சலி' என்ற சிறிய நூல்தான் அவருக்கு உலகத்தின் பெரும் பரிசான நோபல் பரிசை 1913-ஆம் ஆண்டில் சம்பாதித்துக் கொடுத்தது. இதனைத் தொடர்ந்து தாகூருக்கு உலகமெங்கும் வரவேற்பும் புகழும் வந்தெய்தின. வெளிநாட்டு, உள்நாட்டுச் சர்வகலாசாலை களும் சர்க்கார்களும் அவருக்குப் பட்டங்கள் வழங்க முன் வந்தன தாகூருக்குக் கிட்டிய இந்தப் பெரும்புகழைக் குறித்து, பாரதி பல கட்டுரைகளில் வாழ்த்தி வரவேற் றுள்ளார். "கீதாஞ்சலி; முதலாவதாக அவர் (தாகூர்) இங்கிலீஷ் பாஷையில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கும் நூல்கள் மிகவும் சிறியன; பாரகாவியங்களல்ல; பெரிய நாடகங்களல்ல. தனிப்பாடல்கள் சில காண்பித்தார். உலகம் வியப்படைந்தது. நல்வயிர மணிகள் பத்துப் பன்னிரண்டு விற்றால், லக்ஷக்கணக்கான பணம் சேர்ந்து விடாதோ? தெய்வீகக் கவிதையிலே பத்துப் பக்கம் காட்டினால், உலகத்துப் புலவரெல்லாம் வசப்பட மாட்டாரோ?" என்று பாரதி தாகூரைப் பற்றி விதந்தோதிப் பூரிக்கிறார் (பாரதி கட்டுரைகள்: தத்துவம்). தம்மையொத்த கவிஞரொருவருக்குக் கிட்டிய புகழைக் கண்டு இவ்வாறு மனம் பூரித்த பாரதிக்கோ அவரது ஆயுட்காலத்தில்—உலகப் புகழ் கிடக்கட்டும்—அவர் பிறந்த, வளர்ந்த, வாழ்ந்த தமிழ் மண்ணிலேயும்கூட உரிய புகழும் செல்வாக்கும் கிட்டவில்லை. அவரது பெருமையைத் தமிழகமே அவரது மறைவுக்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னர்தான் பெரிதும்

உணரத் தொடங்கியது. இதனுல்தான் உலகப் புகழ் பெற்ற தாகூர் மறைந்த காலத்தில், பாரதநாடு மட்டு மல்லாமல் உலகமே அவரது மறைவுக்காகக் கண்ணீர் சிந்தியது; அவர் புகழைப் பாடியது. ஆனுல் பாரதி காலமான சமயத்திலோ பாரதியின் உற்ற நண்பரான பரலி நெல்லையப்பர் தமது கட்டுரையொன்றில் (பாரதியின் கடைசி நாட்கள் : தினமணி) குறிப்பிட்டுள்ளவாறு, அவரது சடலத் துக்குப் பின்னுல் பத்துப் பன்னிரண்டு பேர்கள்தான் தொடர்ந்து சென்று, அவருக்கான ஈமக்கிரியைகளைச் செய்தார்கள். பாரதியின் நண்பர்களில் வேறு சிலரும்கூட, மறுநாள் மாலையில் 'சுதேசமித்திர'னில் வெளிவந்த செய்திக்குறிப்பின் மூலமாகத்தான் பாரதியின் மறைவைப் பற்றித் தெரியவந்தார்கள் என்றும் அறிகிருேம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் இன்னொரு சம்ப வத்தையும் நினைவுகூர வேண்டும். பாரதி புதுச்சேரியை விட்டு வெளியேறிக் கடையமும் எட்டயபுரமுமாக அலைந்து வசித்து வந்த காலத்தில், எட்டயபுரமன்னரிடம் ஆதரவு நாடி நின்ற காலத்தில், 1919ம் ஆண்டில் நோபல் பரிசும் உலகப் புகழும் பெற்ற தாகூர் தமிழகத்தின் கலாசாரத் தலைநகரெனச் சொல்லத் தகுந்த மதுரைக்கு வருகை தந்தார். இந்தச் சந்தர்ப்பத்தில் பாரதி தாகூரை நேரில் சென்று சந்திக்க விரும்பியதாகவும் சந்தித்து அவரைக் கவிதைப் போட்டிக்கு அழைத்து, அதில் யாருடைய கவிதை நன்ருக இருக்கிறது என்று போட்டி காணவந்த பொது ஜனங்கள் தீர்மானிக்கிருர்களோ, அவர்களுக்கே நோபல் பரிசு சேர வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் அந்தப் போட்டியை நடத்த விரும்பிய தாகவும், அதில் தாம் நிச்சயம் வெற்றிபெற முடியும் எனக் கருதியதாகவும், ‘‘நாம் மட்டும் உலகப்புகழ் பெற முடியாதா? அதற்காகத்தான் நோபல் பரிசைத் தாகூரிட மிருந்து வெல்ல வேண்டும்’’ என்று பாரதி கூறியதாகவும்

ஒரு செய்தி கூறப்படுகிறது. இதனைப் பேராசிரியர் பி. மகாதேவன் எழுதியுள்ள பாரதி பற்றிய ஆங்கில விமர்சன நூல் (Subramania Bharathi—A memoir), சுத்தானந்த பாரதி எழுதியுள்ள 'கவிக்குயில் பாரதி' ஆகிய நூல்களில் நாம் காண்கிறோம். எனினும் பாரதி இரவிலே சொன்ன இந்த விஷயத்தை விடிந்ததும் மறந்து விட்டதாகவும் அவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

தாகூரோடு போட்டியிட்டு, நோபல் பரிசை அவரிட மிருந்து வென்று, உலகப் புகழ் பெறவேண்டும் என்ற பாரதியின் குயுக்தியான எண்ணம் வெறும் புலமைக் காய்ச்சலாலோ, பொறாமையாலோ எழுந்ததெனக் கூற முடியாது. தாகூரின் மீது பொறாமை கொண்டு, அந்த எண்ணத்தால் அவர் என்றும் புழுங்கி வெந்தது கிடையாது. "உலகெலாம் புகழ இன்ப வளம் செறி பண்பல இயற்றும் கவீந்திரனை ரவீந்திர நாதன்" (பாரதமாதா நவரத்தின மாலை) என்று தமது கவிதையிலேயே தாகூரை வாயார வாழ்த்தியவர் பாரதி. மேலும் மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சிக்குப் பின்னரும், ஈராண்டுகள் கழித்து, தாம் காலமாவதற்குச் சுமார் இருபது நாட்களுக்கு முன்னர் எழுதிய "ரவீந்திரர் திக் விஜயம்" (பாரதி தமிழ்: தூரன் தொகுப்பு) என்ற கட்டுரையில், அவர் தாகூரின் மேலை நாட்டு விஜயம் பற்றிக் குறிப்பிட்டு, அதனை வரவேற்றும் பாராட்டியும் எழுதியுள்ளார். பிறிதோரிடத்தில் தாகூரைக் குறித்து, பாரதி பின்வருமாறு எழுதியுள்ளார். "கீர்த்தி யடைந்தால் மஹான் ரவீந்திரரைப் போல அடைய வேண்டும். வங்காளத்தில் மாத்திரமா? இந்தியா முழுதுமா? ஆசியா முழுதுமா? ஜெர்மனி, ஆஸ்திரியா, பிரான்ஸ்— பூமண்டலம் முழுவதும் பரவின கீர்த்தி. இத்தனைக்கும் அவர் பாடிய பாட்டுக்களோ வங்க பாஷையிலே உள்ளன. வெறும் மொழிபெயர்ப்புக்களைத் தான் உலகம் பார்த்திருக்கிறது. அதற்குத்தான் இந்தக்

கீர்த்தி.'' கீர்த்தியைப் பற்றிய பாரதியின் கருத்து இது. ஆம், "நேர்மையான புகழ் இலக்கிய கர்த்தாவுக்கு ஊக்க மளிக்கும் உணவு''தான் (புதுமைப்பித்தனின் 'கடிதம்' என்ற கதை). ஆனுல் பாரதி உயிர் வாழ்ந்த காலத்தில் அவரைப் பெற்ற தமிழ்நாடு இந்த உணவைக்கூட அவருக்கு வழங்கவில்லை. தமது நூல்கள் "மண்ணெண் ணெயிலும் தீப்பெட்டியிலும் சாதாரணமாகப்'' பல்லாயிரக் கணக்கில் பரவ வேண்டும் என்று பாரதி கனவு கண்டார் எனவும் அறிகிறேம். ஆனுல் அது கனவாகத்தான் இருந்து விட்டது.

தாகூர் வங்க மொழியில்தான் தமது கவிதைகளை எழுதினர் ; அவற்றின் மொழிபெயர்ப்புக்களுக்குத்தான் அயல் நாட்டில் அத்தனை கீர்த்தி. இந்தக் கீர்த்தியை அவர் எவ்வாறு தேடிக் கொண்டார் ? அவர் தமது கவிதைகளைத் தாமே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார் ; அவற்றை வெளி யிடுவதற்கான வாய்ப்பு வசதிகளையும் வெளிநாட்டிலேயே அவரால் தேடிக்கொள்ள முடிந்தது. மேலும் ஆங்கிலக் கவிஞரான டபிள்யூ. பி. ஈட்ஸ், மற்றும் ராதன்ஸ்டீன் போன்ற அறிஞர் பெருமக்களும் அவரை மேலை நாட்டாரிடம் தக்க முறையில் அறிமுகம் செய்து வைத்துப் பேருதவி புரிந்தார்கள். ஆனுல் பாரதியோ தமிழ்நாட்டிலேயே தமது புத்தகங்களை வெளியிடுவதற்கு அந் நாளில் நண்பர் களின் தயவை நாட வேண்டியிருந்தது. புத்தகங்களை வெளியிடப் பணம் இல்லாமல், தமது நண்பர்களான பரலி நெல்லையப்பர், ரா. சீனிவாசவரதன் ஆகியோரிடம் பண உதவி கேட்டுப் பாரதி எழுதியுள்ள உருக்கமான கடிதங்கள் நம்மால் மறக்க முடியாதவை. பாரதி காலமான பின்னரே அவரது பாஞ்சாலி சபதம் (இரண்டாம் பாகம்) முதலிய சிறந்த படைப்புக்கள் புத்தக வடிவம் பெற்றன. தமிழில் அற்புதமான கவிதைகள் எழுதிய பாரதி தமது கவிதைகள் சிலவற்றைத் தாமே ஆங்கிலத்தில் மொழி

பெயர்த்தும் இருக்கிறார் (Agni and other poems). ஆங்கிலத்தில் எழுதும் ஆற்றலும் பாரதிக்கு நன்கிருந்தது. "பொன் வால் நரி" (Fox with the golden tail) என்ற தலைப்பில் அன்னி பெஸண்ட் அம்மையாருக்கு எதிரான அங்கதமாக பாரதி ஒரு நீண்ட உருவகக் கதையையும் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டிருக்கிறார். அன்றைய அரசியல் சூட்டின் காரணமாக அந்தப் புத்தகத்துக்கு அன்று தமிழ்நாட்டில் கிராக்கி ஏற்பட்டது. இதனைக் கண்ட பாரதி "போகச் சொல்லு விதவைப் பசங்களை! நான் என்னுடைய தாய் மொழியில் என் முழு மூளையையுமே கசக்கிப் பிழிந்து 'பாஞ்சாலி சபதம்' பாடியிருக்கிறேன். அது நன்றாக இருக்கிறது என்று ஒரு கடிதமும் எனக்கு வரவில்லை. அதை நீ ஒருவன்தான் வாசிக்கிறாய்" என்று தமது நண்பர் குவளை கிருஷ்ணமாச்சாரியிடம் நொந்து கொண்டாராம். (என் குருநாதர் பாரதியார்: ரா. கனகலிங்கம்-பி. ஸ்ரீ. யின் முன்னுரை). மேலும் பாரதி புதுவையில் வாழ்ந்த காலத்தில் பிறமொழிப் புலமை மிகுந்த அரவிந்தர், வ. வெ. சு. அய்யர் முதலியோரின் நட்பும் அவருக்கிருந்தது. ஆனாலும் இந்தப் பெருமக்களும் பாரதியின் பாடல்களைப் பிறமொழிகளில் மொழி பெயர்க்கவும், பாரதியை வெளிநாட்டாருக்கு அறிமுகப் படுத்தவும், அவரது புகழை உலகம் உணரச் செய்யவும் எந்த அளவுக்கு உதவினார்கள் என்பதும் நமக்குத் தெரியவில்லை. வ. வெ. சு. அய்யரைப் பொறுத்த வரையிலும் கம்பனை மொழிபெயர்த்து மேலை நாட்டாருக்குக் காட்டவேண்டும் என்பதில் அவருக்கிருந்த ஆர்வமும் முயற்சியும் பாரதி விஷயத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. வெளிநாட்டவரான ஜேம்ஸ் எச். கசின்ஸ் மட்டும் பாரதியின் ஆயுட்காலத்திலேயே பாரதியின் பாடல்கள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். மேலும் பிரஞ்சு மொழியிலும் பாரதியின் பாடல்கள் சிற்சில மொழி பெயர்க்கப்பட்டு, அந் நாட்டவர்

சிலரின் பாராட்டுதலைப் பெற்றன என்று அறிகிறோம். அதுவும் 1919ம் ஆண்டில் பாரதி எட்டயபுர மன்னருக்கெழுதிய சீட்டுக் கவியில் அவரது வாயிலாகவே தெரிந்து கொள்கிறோம். கிட்டத்தட்ட இருபதாண்டுக்காலம் வறுமை வாழ்வை மேற்கொண்டு, இந்த நாட்டுக்காக உழைத்து, அற்புதமான கவிதைகளை ஆக்கிப் படைத்து, இந்திய நாட்டின் அரசியல் வரலாற்றிலும், உலகத்தின் இலக்கிய வரிசையிலும் அழியாத இடத்தைப் பெறும் அளவுக்குப் பணிசெய்து முடித்திருந்த நிலையிலும், தாமே ஒரு காலத்தில் உதறித் தள்ளி விட்டுப்போன அதே எட்டயபுர சமஸ்தானத்தை மீண்டும் நாடி, ஜீவனோபாயத்துக்காகத் தமது புகழையும் பெருமையையும் தாமே விளம்பரப்படுத்தி நிற்க நேர்ந்த துர்ப்பாக்கியத்துக்கு ஆளான பாரதியைத்தான், தாகூர் தமிழகத்துக்கு விஜயம் செய்த காலத்தில் நாம் பார்க்கிறோம். இத்தகைய சூழ்நிலையில் பாரதிக்கு ஏற்பட்ட அந்தக் கவிதைப் போட்டி எண்ணம் நியாயமான தர்மாவேசத்தினாலும் நெஞ்சக் கொதிப்பாலும் எழுந்த எண்ணமாகவே இருக்க முடியும் என்பதை நாம் லகுவில் உணர்ந்து கொள்ளலாம்.

இவையெல்லாவற்றுக்கும் மேலாக, பாரதி தாகூரைப் பற்றி நன்கறிந்திருந்தார். இளமையில் பாரதி காசிவாசம் புரிந்த காலத்திலேயே தாகூர் வங்க நாட்டின் ஒப்பற்ற கவிஞராக மதிக்கப்பட்டுவிட்டார். எனவே காசியிலிருந்த பாரதிக்கும் தாகூரின் புகழ் எட்டியிருக்கும் என்று நாம் எதிர்பார்க்கலாம். எனினும் அத்தகைய கவிஞரை நேரில் சென்று சந்திக்கும் எண்ணம் கல்கத்தாவுக்கு அருகிலுள்ள காசியில் இருந்த பாரதிக்கு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. பின்னர் அவர் காசிக் காங்கிரசுக்குச் சென்றுவிட்டு நிவேதிதா தேவியைச் சந்திப்பதற்காகக் கல்கத்தாவுக்குச் சென்ற காலத்திலும், பாரதி தாகூரைக் காணவில்லை; தாகூரைக் கண்டு பேச வேண்டும் என்ற எண்ணமோ நாம் முன்னர்க் குறிப்பிட்டபடி அவருக்கு 1919ம் ஆண்டில்

தான் ஏற்பட்டது. எனினும் அவர் தாகூரைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெறவில்லை. தாகூரின் கவிதா தரிசனமே தமக்குப் போதும் என்று இருந்துவிட்டாரோ, என்னவோ? தாகூருடன் அவர் கடிதப் போக்குவரத்து மேற்கொள்ள முனைந்ததாகக்கூடத் தெரியவில்லை. என்றாலும் தமிழ் நாட்டில் தாகூரின் புகழைப் பரப்புவதில் பாரதி முன்னணி யில் நின்றார். அவர் தாகூரின் கவிதையை மொழி பெயர்த்தார் (நாட்டுக்கல்வி); தாகூரின் கல்வி பற்றிய ஐந்து கட்டுரைகளை (பஞ்ச வியாசங்கள்) மொழிபெயர்த்துள்ளார்; மேலும் அவரது பிரசங்கங்கள் சிலவற்றையும் மொழி பெயர்த்துள்ளார்; அவரைப்பற்றிப் பல கட்டுரைகளிலும் குறிப்புக்களிலும் குறிப்பிட்டுள்ளார் (பாரதி தமிழ், பாரதி கட்டுரைகள்); தாகூரின் சிறுகதைகள் பலவற்றையும்கூட, பாரதி தமிழாக்கியுள்ளார் (பாரதி மொழிபெயர்த்த தாகூர் கதைகள்). இவ்வாறு பாரதி தாகூரை நன்கறிந்து அவரது கருத்துக்களையும் புகழையும் தமிழகத்தில் பரவச் செய்தார். ஆனால் தாகூர் பாரதியை அறியவில்லை; அவர் தமிழகத்துக்கு வந்த காலத்திலும், தம்மையொத்த பெருங் கவிஞரொருவர் அந்த மண்ணில் இருந்து வந்ததைக்கூட அவர் அறிந்துகொள்ளவில்லை. ஆம், பாரதியின் பெயரைக் கூடத் தாகூர் தமது வாழ்நாட் காலத்தில் என்றுமே தெரிந்துகொண்டதாக நமக்குத் தெரியவில்லை!

# 3

## சிந்தனை ஒன்றுடையாள்!

இவ்வாறு இந்த இருபெருங் கவிஞர்களின் வாழ்க்கையையும் அதில் அவர்கள் பெற்ற வாய்ப்பையும் பார்க்கின்றபோது, இத்தகைய வேற்றுமைகள் நம் மனத்தில் தோன்றுவது இயல்புதான். என்றாலும், இவர்கள் இருவரது சாதனையிலும், சத்திய வேட்கையிலும் வேற்றுமை யம்சத்தைவிட, ஒருமைப்பாடே மேலோங்கியிருப்பதை நாம் காணமுடியும். பாரதியைத் தாகூர் அறியவில்லை; ஆனால் பாரதி தாகூரை அறிந்திருந்தார். மேலும் பாரதி தேசிய கவியாக முகிழ்த்து வளரத் தொடங்கிய பருவத்தில், தாகூர் மலர்ந்து மணம் பரப்பிப் புகழ் எய்திவிட்ட மூத்த கவிஞராகத் திகழ்ந்தார். அத்துடன் பாரதத்தின் மறு மலர்ச்சிக்கே முன்னோடியாகவிருந்த வங்க நாட்டின் தேசிய மறுமலர்ச்சி, தமிழ் நாட்டையும் கவர்ந்து அதனைத் தன் வழியில் விழிப்பூட்டிய காலத்தில், வங்கநாடே தமிழ் நாட்டுக்கும் ஆதர்சமாகத் திகழ்ந்தது. தேசிய மறுமலர்ச் சியில் பங்கெடுக்க முனைந்த தமிழக மறுமலர்ச்சியும், அந்தத் தமிழகத்துத் தேசிய கவியுமான பாரதியும் பாலியப் பருவத்தி லிருந்த காலத்தில், வங்க நாட்டுத் தேசிய மறுமலர்ச்சியும், அதன் வாரிசான தாகூரும் முற்றி முதிர்ந்து பக்குவக் கனிவெய்திய நிலையில் இருந்ததையும் நாம் காணமுடியும்

எனவே தாகூரின் படைப்புக்கள் பாரதியைக் கவர்ந்திழுக்கவும், பாரதியின் ஆக்கப் படைப்புக்களில் தாகூரின் நேரடியான சாயல்கள் பிரதிபலித்திருக்கவும் வாய்ப்புக்கள் உண்டு என நாம் எதிர்பார்ப்பது இயற்கைதான். பாரதி தாகூரை மொழிபெயர்த்தார்; பல இடங்களில் தாகூரை மேற்கோள் காட்டுகிறார். அவரது கருத்தைத் தாமும் ஒப்புக்கொள்கிறார். என்றாலும் தாகூரின் படைப்புக்களுக்கு நேரிணையான சாயல்கள் எதுவும் பாரதியின் படைப்புக்களில் படிந்திருந்ததாக நம்மால் சொல்ல இயலவில்லை. அதற்கான மேலோட்டமான சான்றுகள்கூட நமது கண்ணுக்குத் தென்படவில்லை. இந்த இரு பெருங்கவிஞர்களின் சிந்தனையும், கருத்தும் பல்வேறு துறைகளில் ஒன்றுபட்டிருப்பதை நாம் காணமுடிகிறது. ஆனாலும் சமகாலத்தில் வாழ்ந்த இருபெரும் புலவர்கள் ஒரே மாதிரியாகச் சிந்திப்பது இயற்கை என்ற உண்மையையும் நாம் மறந்துவிடுவதற்கில்லை. ஏனெனில் கவிஞன் என்பவன் ஆகாயத்திலிருந்து குதித்து வருகின்ற அமானுஷ்யப் பிறவி அல்ல. தான் பிறந்த சமுதாயத்தில் நிலவும் பல்வேறு சூழ்நிலைகளுக்கும், அதன் சிந்தனைகளுக்கும், அதன் தேவைகளுக்கும் அவன் கட்டுப்பட்டவன். ஒரு கவிஞன் சமுதாயத்திலிருந்து எட்டி நிற்க முயன்றாலும், அதனோடு ஒட்டி நின்றாலும் சமுதாயத்தின் இந்தச் சூழல்களிலிருந்து அவன் தப்பித்துக்கொண்டுவிட முடியாது. சமுதாயத்தோடு அவன் கொள்கின்ற உறவின், உணர்வின் பலாபலத்தைப் பொறுத்து, அவை அவனது எழுத்துக்களில் பிரதிபலிக்கத் தவறுவதில்லை. எனவே பாரதியையும் தாகூரையும் உருவாக்கி வளர்த்ததே அன்று நிலவிய பாரத சமுதாயத்தின் சூழ்நிலைதான் என்பதை நாம் மறந்து விடக்கூடாது. இதனால் இருவரிடம் ஒத்த கருத்துக்கள் (கற்பனைகள் அல்ல) தோன்றியுள்ளதைக் கண்டு நாம் வியப்பதற்கேதுமில்லை.

தாகூர் என்று சொன்னால் ரவீந்திர நாத தாகூரையும், பாரதி என்று சொன்னால் சுப்பிரமணிய பாரதியையுமே

குறிக்கும் அளவுக்கு, இந்தக் கவிஞர்கள் கவிதையுலகில் தத்தம் தனித்தன்மையையும் மேதா விலாசத்தையும் நிலை நாட்டிக் கொண்டவர்கள்; இந்தத் தனித்தன்மை ஒருபுற மிருக்க, இருவரிடத்திலும் நாம் பற்பல ஒற்றுமையம்சங்களை யும் காண்கிறோம். இரண்டு கவிஞர்களும் பண்டைய மரபிலக்கண வழியில் நின்று கவிதை யாத்தவர்களல்ல. சொல்லும் பொருளில் புதுமையைக் கையாண்டதைப் போலவே அதனை உருவேற்றிவிடும் வாகனமான வடிவத்திலும்கூட அவர்கள் புதுமையைக் கையாண்டார் கள். பாரதி பழைய யாப்பிலக்கண மரபிலிருந்து பெரிதும் மாறுபட்டுச் சென்றவர் எனச் சொல்லமுடியாது. எனினும் அவரே கூறுவதுபோல், "எளிய சந்தம், எளிய நடை, ஜனங்கள் விரும்பும் மெட்டு" என்பதையே தமது கவிதையின் வடிவாகக் கொண்டு, யாப்பிலக்கணத்துக்குப் புறம்பான, அதாவது அந்த இலக்கணத்தில் வரையறை கூறப்படாத பிற்காலத்துச் சந்தங்களையும் மெட்டுக்களையும் பயன்படுத்தியே பெரும்பாலான பாடல்களை இயற்றி யுள்ளார். குடுகுடுப்பைக்காரன் பாட்டு, குருவிக்காரிப் பாட்டு, பாரதியே சொல்லியுள்ளதுபோல் (பாஞ்சாலி சபதம்: குறிப்புக்கள்) "தெருவில் ஊசிகளும் பாசி மணிகளும் விற்பதோடு பிச்சையெடுக்கவும் செய்கின்ற" பெண்களின் பாட்டு முதலிய பாமர வழக்குப் பாடல் மெட்டுக்களையும் பாரதி பயன்படுத்தினார்; "வார்த்தை களையும் செய்கைகளையும் விளக்குதற்கு" இப்படிப்பட்ட நடைகள் மிகவும் பொருத்தமாக உள்ளன என்பதையும் அவரே உணர்ந்து குறிப்பிட்டுள்ளார். இத்தகைய நடைகளைத்தவிர, தமிழ்க் கவிதை இது வரையிலும் காணாத எளிய, புதிய சொற்களையும் பதச்சேர்க்கை களையும் அவர் கையாண்டு வெற்றி கண்டார். இதனால் பண்டித உலகம் அவரைக் கவிஞர் என்று ஏற்கவே மறுத்து வந்தது; பண்டாரப் பாட்டுப் பாடகன் என்று கூடச் சொல்லியது. பாரதி வாழ்ந்த காலத்தில் 'தமிழ்

நாடு' பற்றிப் பாட்டெழுதும் ஒரு போட்டியில், பாரதி அனுப்பிய "செந்தமிழ் நாடென்னும் போதினிலே" எனத் தொடங்கும் அருமையான, அழியாத பாட்டு பரிசு பெறவில்லை என்றும், வேறு யாரோ அனுப்பிய பாட்டுக்குத் தான் முதற்பரிசு கிட்டிய தென்றும் ஒரு செய்தியுண்டு. பாரதியையும் மிஞ்சிப் பரிசு பெற்ற அந்த 'மகாகவி' யாரென்பதே நிச்சயமாகவில்லை! பாரதியைப் போலவே தாகூரும் மரபிலக்கண வழி நின்று பாடாத கவிஞர்தான். வங்கமொழி அதுவரையிலும் காணுத புதிய யாப்பமைதி களையே அவர் சிருஷ்டித்தார் எனச் சொல்வார்கள். பாரதியைப் போலவே அவரும் எளிய சந்தமும் நடையும் கொண்ட பாக்களையே எழுதினுர். மேலும் அதற்கான மெட்டுக்களை அவர் வங்க நாடோடிப் பாடல்களிலிருந்தும், 'பாவுல்' பாடகர்கள் என்னும் வைஷ்ணவத் தெருப் பாடகர் களின் சந்தங்களிலிருந்தும் தேர்ந்தெடுத்து, புதிய வடிவங்களைச் சமைத்தார் எனவும் தெரிய வருகிறது. இதனுல் வங்கத்துப் பண்டிதர் கூட்டமும் அவரை முதலில் ஏற்க மறுத்தது. பள்ளிப் பரீட்சைகளில் இலக்கணப் பாடத்தில் தாகூரின் படைப்புக்களைக் கொடுத்து, 'பிழை திருத்துக' என்று கேள்வி கேட்குமளவுக்கு அவர்களது காழ்ப்பும் கசப்பும் வெளிப்பட்டன. சொல்லப் போனுல், பாரதி மறைந்து பலவாண்டுகள் கழிந்த பின்னும் அவரது கவிதை மறையாமல் நாளுக்குநாள் செல்வாக்குப் பெற்று வளர்வதைக் கண்ட பின்னர், தமிழ் நாட்டுப் பண்டிதர் கூட்டம் பாரதி சிறந்த கவிஞர்தான் என்னும் அவர் களுக்குக் கசப்பான உண்மையை மென்று விழுங்கி, பாரதியை ஏற்க முன்வந்ததைப் போலவே, தாகூருக்கு நோபல் பரிசு வந்த பின்னர்தான் வங்கத்துப் பண்டிதர் கூட்டமும் அவரை ஏற்றுக் கொள்ள முன்வந்தது என்று சொல்லவேண்டும். தாகூரின் இத்தகைய எளிய, இனிய பாடல்கள் வங்கத்தின் இசைத்துறைக்கே புத்துயி ரளித்தன. 'ரவீந்திர சங்கீத்' என்று பெயர் பெறுமளவுக்கு

அவரது இசைப் பாடல்கள் அங்கு ஒரு புதிய விழிப்பையே ஏற்படுத்தின. அதேபோல் தமிழ் நாட்டில் தமிழிசை இயக்கம் தோன்றிய காலத்திலும், 'தமிழில் பாடுவதற் கேற்ற இசைப் பாடல்கள் உண்டா?' என்று சிலர் நாப்பறை கொட்டிக் கேட்கத் துணிந்தபோது, 'ஏன்? பாரதி பாடல்கள் இல்லையா?' என்று பதிலுக்குக் கேட்டு வாயடைக்குமளவுக்கு, பாரதியின் எளிமையும் இனிமையும் நிறைந்த பாடல்களும், சாகித்தியங்களும் தமிழிசைக்கு அன்றும் இன்றும் உரமளித்து வந்திருப்பதையும் நாம் அறிவோம். இரு கவிஞர்களுமே நல்ல இசைஞானம் மிகுந்த பாடகர்கள். தாகூர் தமது கவிதைகளைத் தாமே இனிமையாகப் பாடுவார். பாரதியும் சிறந்த பாடகராக இருந்தார் என்பதை அவர் பாடக் கேட்கும் பாக்கியம் பெற்ற தமிழன்பர்கள் வாயிலாக அறிகிறோம்.

இந்த இரு கவிஞர்களின் படைப்புக்களைப் பார்க்கின்ற போதும், இருவரும் இலக்கியத்தின் பல்வேறு துறைகளிலும் பணியாற்றியவர்கள் என்பதைக் காண்கிறோம். கவிதை, இசைப்பாடல், நாவல், நாடகம், சிறுகதை, இலக்கிய விமர்சனம், தத்துவ விசாரணை, அரசியல் கட்டுரை, சிந்தனை ஆராய்ச்சி முதலிய பற்பல துறைகளிலும் தாகூரின் படைப்புக்கள் வெளிவந்துள்ளன. மேலும் தாகூர் ஓவியராகவும், நடிகராகவும், ஆசிரியராகவும் பணியாற்றியவர். எழுத்துத் துறையில் பாரதியும் தாகூரைப் போலவே பல்வேறு துறைகளிலும் பணியாற்றியவர். கவிதையில் மட்டுமல்லாமல் உரை நடைத் துறையிலும் பாரதி ஆற்றிய பங்கு மகத்தானது. பத்திரிகைத் தொழில், குடும்ப வாழ்க்கை, அரசியல் சூழ்நிலை முதலியவற்றில் ஏற்பட்ட பல்வேறு சங்கடங்களின் காரணமாக, அவர் இயற்றிய "சின்னச் சங்கரன் கதை", "சந்திரிகையின் கதை" போன்ற அற்புதமான இலக்கியங்கள் அரைகுறையாக நின்றுவிட்டபோதிலும், அவரிடம் சிறந்த நாவலாசிரியராவதற்கான தன்மைகள்

இருந்தன என்பதை நாம் காண்கிறோம். மேலும் இவ்விரு கவிஞர்களும் உயிர் வாழ்ந்த காலத்தில் நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகளும், அன்று நிலவிய பன்முகப்பட்ட சமுதாயப் பிரச்சினைகளும் இவர்களது கவனத்தைக் கவரத் தவற வில்லை என்றே சொல்ல வேண்டும். அவை பற்றிய தமது கருத்துக்களைச் சொல்வதில் இருவருக்கு மிடையே அழுத்தமும் தொனியும் வேறுபட்டிருக்கலாம்; மற்றப்படி இருவருக்குள்ளும் இணைந்த கருத்துக்களே பெரிதும் நிலவி வந்திருப்பதை நாம் காணலாம். சொல்லப்போனால், இருவருமே தொட்டதையெல்லாம் பொன்னுக்கும் தோன்றல்களாகத்தான் பணியாற்றினார்கள். அன்றைய இந்தியாவில் நிலவி வந்த குழந்தை மணத்தைக் கண்டித்தும், கிண்டல் செய்தும் தாகூர் கவிதைகள் எழுதினார்; பாரதியும் இதனைக் கண்டித்துப் பாடல்கள் எழுதியுள்ளார் (சுய சரிதை; மணம் எனும் பகுதி). இதனைப் போலவே ஜாதியக் கொடுமை, சமுதாய அநீதிகள், வெள்ளையர்மீதும் வெள்ளை நாகரிகத்தின்மீதும் மோகம் முதலியவற்றைக் கண்டித்தும் இருவரும் பலபடக் குரல் எழுப்பியுள்ளனர். எல்லாவற்றுக்கும் மேலாக, தேசியக் கல்வியைக் குறித்தும் தாய்மொழிக் கல்வியைக் குறித்தும் இருவரும் ஒத்த கருத்துக்களையே வெளியிட்டுள்ளனர். தாய்மொழியிலேயே எல்லாப் பாடங்களையும் கற்க வேண்டும் என்பதிலும், தாய்மொழியை அரியாசனத்தில் ஏற்றினால்தான், அதன் வளர்ச்சிக்கான வாய்ப்புக்களைப் பெருக்க முடியும் என்பதிலும் இருவருக்கும் ஒன்றுபட்ட அபிப்பிராயம் இருந்தது. பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் முதன் முதலில் தாய்மொழியில் பிரசங்கம் செய்த முதல் இந்தியர் தாகூர் என்றுதான் சொல்லவேண்டும். தாய்மொழி வளர்ச்சி பற்றியும், தேசிய, மொழிப் பிரச்சினை பற்றியும் பாரதி தெரிவித்துள்ள கருத்துக்கள் இன்றும் நமக்கு வழிகாட்டியாகவும் ஒளி காட்டியாகவும் விளங்குகின்றன என்பதையும் நாம் அறிவோம்.

# 4

## வங்க மறுமலர்ச்சியும், தேசிய எழுச்சியும்

இந்திய நாட்டின் மறுமலர்ச்சிக்கும், தேசிய எழுச்சிக்கும் வங்க நாடே மூத்த பிள்ளையாகவும் முன்னேடியாகவும் திகழ்ந்தது என்பதை முன்னர்க் குறிப்பிட்டோம்; அதே போன்று தாகூரும் பாரதிக்கு இருபத்தொன்று வயது மூத்த பிள்ளையாக இருந்தார். எனவே பாரதிக்கு முன்னதாகவே தேசியப் போராட்டத்தில் பங்குகொள்ளும் வாய்ப்பும் வசதியும் தாகூருக்கிருந்தன. 1886-ம் ஆண்டில் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மாநாட்டின்போது, இருபத்தைந்து வயது இளைஞரான தாகூர் அந்த மாநாட்டின் தொடக்கத்தில் தாமே இயற்றிய ஒரு தேசபக்திப் பாடலை மேடைமீது பாடினார். இதற்கு முன்பே அவர் தேசியப் பாடல்களையும் எழுதத் தொடங்கிவிட்டதோடு, திறமை வாய்ந்த இளங்கவிஞர் என்ற பெயரையும் சம்பாதித்துக் கொண்டு விட்டார். 1884-ம் ஆண்டிலேயே அவர் ஆங்கிலேயனிடம் மனுப்போட்டு, சுதந்திரப் பிச்சை கேட்கும் மிதவாதப் போக்கைக் கண்டித்து எழுதினார். ஆரம்பத்தில் காங்கிரஸ் மகாசபை மிதவாதிகளின் கையிலும், ஜரிகைத் தலைப்பாகைகளின் சட்டசபை மோகத்திலும், ராஜவிசுவாசத்திலும் சிக்கிக் கொண்டிருந்ததைக்

கண்டு, 1889-ம் ஆண்டில் தாகூர் பின்வருமாறு எழுதினர்: "காங்கிரஸ் மகாசபை தனக்குள்ள சொந்தச் சக்திகளோடு தேசத்துக்கு நிலையான தொண்டாற்றினல் தான் அது மக்களின் இதயத்திலே நிரந்தரமாக வேரூன்றி நிற்க முடியும். இதற்கு மாறுக, அது அடிக்கடி மனம் மாறும் எஜமானர்களின் முன்னுல் தனது சட்டசபை மோகத்தின் வாலையாட்டிக் கொண்டு திரிந்தால், அதற்கு ஒரொரு நாளில் உணவும் கிடைக்கலாம்; ஒரொரு நாளில் உதையும் கிடைக்கலாம். இறுதியில் ஒருநாள் அது சாலையோரத்தில் நாதியற்றுச் செத்து விழுந்து கிடக்கவும் நேரும்." (இன்றைக்கு உங்கள் தாகூர்—ஹிரேன் முகர்ஜி தொகுப்பு). எனவே பாரதிக்கு முன்பே தாகூர் தேசிய கவியாக, தேசியப் போராட்டத்தில் பங்கெடுத்து விட்டார்.

வங்கத்தில் ஏற்பட்ட இந்தத் தேசிய எழுச்சி நாடெங்கிலும் காட்டுத்தீப்போல் பரவுவதற்கான ஒரு நிகழ்ச்சி 1905-ம் ஆண்டில் ஏற்பட்டது. அதுதான் அன்றைய வைஸ்ராயான லார்ட் கர்ஸான் வங்காளத்தை இருகூருக்கி, இந்நாட்டில் முதன் முதலாகப் பிரிவினை வாதத்துக்கு விஷவித்திட்ட நிகழ்ச்சியான வங்காளப் பிரிவினை. வங்கப் பிரிவினையைப் பற்றிய வைஸ்ராயின் பிரகடனம் 1905-ம் ஆண்டு ஜூலை மாதம் 20-ம் தேதி வெளியிடப்பட்டது. காஸானின் இந்த அடாத செயலைக் கண்டு வங்க நாடே கொதித்தெழுந்தது. வங்கத்தின் ஐக்கியத்தைக் குலைக்கும் இந்தச் செய்கை தாகூர் போன்றவர்களின் தர்மாவேசத்தைக் கிளறி விட்டது. "என்றைக்குமில்லாதவாறு கிளர்ச்சிவேகம் மேலோங்கியது. ஒவ்வொரு பத்திரிகைத் தாளிலும் விபின சந்திர பாலரின் ஆவேசமான பிரசங்கங்களும், மற்றும் பேச்சாளர்களின் உறுதி வாய்ந்த கட்டுரைகளும், ரவீந்திரநாத தாகூர், ரஜனி காந்த ஸென் முதலியோரின் தேசபக்திப் பாடல்களும் இடம்பெற்று நாடு முழுவதும் வெள்ளம்போல் பரவின. ஆங்கில நாகரிகம் மிகுந்த கனவான்கள் தமது அன்னிய நாட்டு உடைகளைத் துறந்தார்கள்; அடைபட்டுக் கிடந்த பெண்மக்கள்

ஆர்ப்பாட்டத்தில் வந்து கலந்து கொண்டார்கள்; மாணவர்கள் மறியலிலும் ஊர்வலங்களிலும் அணிவகுத்துச் சென்றார்கள்; எண்ணற்ற குடும்பங்கள் அன்னிய நாட்டு ஆடம்பரப் பொருள்களைக் கைவிட்டன...'' (வங்க மறுமலர்ச்சி பற்றிய குறிப்புக்கள் அமித் சென்). தாகூர் வங்கப் பிரிவினைக்கு எதிரான போராட்டத்துக்குத் தொண்டாற்றினார்; தலைமை தாங்கினார்; பல பாடல்களைப் பாடினார்; ''நாம் வங்காளிகள்; நாம் ஒன்றுபட்டவர்கள்'' என்று கோஷித்தார். ''(இந்தப் பிரிவினைச்) சட்டம் அமுலுக்கு வந்தாலும் வராவிட்டாலும், இங்கிலாந்து மக்கள் நமது பரிதாபக் குரல்களைக் கேட்டாலும் கேட்காவிட்டாலும், நமது நாடு என்றென்றைக்கும் நமக்கே உரியது. நமது மூதாதையர்களின், நமது மக்களின், நமது சந்ததியாரின் நாடு இது. நமக்கு உயிரும் உரமும் நன்மையும் தரும் நாடு இது!'' என்று அவர் எழுதினார். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் பங்கிம் சந்திர சாட்டர்ஜி எழுதிய ''வந்தே மாதர கீதம்'' தேசிய கீதம் போல ஒலிக்கத் தொடங்கியது; 'வந்தே மாதரம்' தேசிய விடுதலைக் கோஷமாயிற்று.

அன்றைய நிலையில் ''வங்காளம் தும்மினால் இந்தியா பூராவும் சளி பிடிக்கும்'' என்று சொல்லக்கூடிய ஒரு சூழ்நிலை இந்திய நாட்டில் நிலவியது. வங்கப் பிரிவினையையொட்டியெழுந்த வங்கத்தின் மாபெரும் தேசிய எழுச்சி தமிழ் நாட்டுக்கும் பரவியதையும், தமிழ் நாட்டில் வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்ரமணிய சிவா முதலியோர் தேசியப் போராட்டத்தில் இறங்கியதையும் நாமறிவோம். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் 1904-ம் ஆண்டின் இறுதியில் பாரதி 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் சேர்ந்து, முதன் முதலாகப் பத்திரிகாசிரியத் தொழிலில் புகுந்தார். எட்டயபுரத்துக் ''கவுண்டனார்ப் பலவர்கள்'' மத்தியிலே வாழ்ந்து, கரடு முரடான ''ஒருபா ஒரு பஃது'' முதலியன எழுதிக் கொண்டிருந்த பாரதியைத் தேசிய இயக்கம் கவர்ந்திழுத்த காரணத்தால், பாரதி எளிமையும் இனிமையும், வலிமையும்

வனப்பும் மிகுந்த தேசியப் பாடல்களை எழுதும் கவியாக மாறிவிட்டார். நாட்டிலே எழுந்த அரசியல் போராட்ட உத்வேகம், பாரதியையும் அரசியலில் தீவிரமாக ஈடுபடச் செய்தது; வங்கத்து இயக்கமும் வந்தே மாதர கோஷமும் அவரைக் கவர்ந்தன.

**வந்தே மாதரம் என்போம்—எங்கள்**
**மாநிலத் தாயை வணங்குதும் என்போம்!**

என்று முதலடியில் அந்தக் கோஷத்தையும் இரண்டா மடியில் அதன் அர்த்தத்தையும் கூறி, பாரதி அதனைத் தமிழ் மக்களிடம் எடுத்தோதினர். 'சுதேசமித்திர'னில் பாரதி முதன் முதலில் எழுதிய கவிதையே "வங்க வாழ்த்துக் கவிகள்"(15-9-1905) என்பதாகும் (பாரதி தமிழ்: தூரன் தொகுப்பு). அதே சமயம் அவர்,

**ஆயிரம் உண்டிங்கு ஜாதி—எனில்**
**அன்னியர் வந்து புகலென்ன நீதி?**

என்று அன்னியராட்சியை எதிர்த்தும்,

**ஒன்று பட்டாலுண்டு வாழ்வு—நம்மில்**
**ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு**

என்று பிரிவினையை எதிர்த்து ஒற்றுமையை வற்புறுத்தியும் பாடல்கள் ஆக்கினர். இந்தக் காலம் தொட்டு, இந்திய நாட்டுத் தேசிய இயக்கமும், அதேபோல் வெள்ளையரின் அடக்குமுறைத் தாண்டவமும் பரஸ்பரம் அதிகரிக்கத் தொடங்கின; இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அடக்குமுறைக்கு அஞ்சிப் பணிந்து விடாது, பாரதி மேன்மேலும் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டார். வங்கத்தில் விபின சந்திர பாலரின் தீக்கனல் பறக்கும் முழக்கங்கள் முழங்கின; மராட்டிய கேசரியான திலகர் வங்கத்துக்கு விஜயம் செய்தார்; விவேகாநந்தரின் தம்பியான பூபேந்திர நாதர் வீரமுழக்கம் செய்தார்; பிரம பாந்தவ உபாத்தியாயர் போர்க்குணம்

மிகுந்த தேசியவாதியாக விளங்கி, இளைஞர்களைத் தம்பால் கவர்ந்தார். இதனுல் இவர்கள் மீதெல்லாம் ராஜத்துவேஷ வழக்குகள் போடப்பெற்றுத் தண்டனைகள் வழங்கப் பெற்றன. இந்தச் சந்தர்ப்பத்தில் பாரதி விபினசந்திர பாலரைச் சென்னைக்கு அழைத்து வந்து பிரசங்கம் பொழிய வைத்தார் (1907); திலகரைப் பற்றியும், பூபேந்திரநாதர் கைதானதைப் பற்றியும் (பூபேந்திர விஜயம் : கவிதை) பாடல்கள் பாடினுர்; லஜபதிராய் நாடு கடத்தப்பெற்றதைப் பற்றிக் கண்ணிகள் பாடினுர். (லஜபதியின் பிரலாபம் : கவிதை). மேலும் சுந்தரமூர்த்தி நாயனுரின் திருத்தொண்டத் தொகையைப்போல், பாரதியும் புதிய தேசியத் திருத் தொண்டத் தொகை பாடினுர் :

**அன்னியர் தமக்கடிமை யல்லவே—நான்**
**அன்னியர் தமக்கடிமை யல்லவே!**
**மன்னிய புகழ்ப் பாரத தேவி**
**தன்னிரு தாளிணைக் கடிமைக் காரன்**
**இலகு பெருங்குணம் யாவைக்கும் எல்லையாம்**
**திலக முனிக்கொத்த அடிமைக் காரன்**
**வெய்ய சிறைக்குள்ளே புன்னகை யோடுபோம்**
**ஐயன் பூபேந்த்ரனுக் கடிமைக் காரன்**
**காலர் முன்னிற்பினும் மெய்தவறு எங்கள்**
***பாலர் தமக்கொத்த அடிமைக் காரன்**
**காந்தன லிட்டாலும் தர்மம் விடாப்பிரம்ம**
**பாந்தவன் தாளிணைக் கடிமைக் காரன்**

இதன்மூலம் வங்க தேசிய எழுச்சியால் பாரதி எவ்வளவு தூரம் கவர்ந்திழுக்கப்பட்டிருந்தார் என்பதை நாமறியலாம். சொல்லப்போனுல் இந்தக் கால கட்டத்தின் ஒவ்வொரு சரித்திர நிகழ்ச்சிகளையும், தேசபக்தர்களையும் இனம் கண்டு கொள்ளும் விதத்தில் பாரதியின் தேசியப் பாடல்கள் அமைந் துள்ளன. மிதவாதப் போக்கிலிருந்து விழிப்புற்று, வெள்ளம்

***பாலர் : விபின சந்திர பாலர்.**

போல் நாடு தழுவிப் பொங்கியெழுந்த தேசியப் பிரவாகத்தில் இந்தக் கால கட்டத்தின்போது குதித்த பாரதி அந்தப் பிரவாகத்தில் தாமும் ஒரு துளியாகக் கலந்து, அற்புதமான தேசிய கவியாக மலர்ந்தார்; மேலும் மேலும் மணம் பரப்பினர். கடுமையான அடக்குமுறைத் தாண்டவம் நிலவி வந்த போதிலும், வங்கப் பிரிவினையை யொட்டி யெழுந்த தேசிய இயக்கம் விம்மி விகசிக்கத்தான் செய்தது. இதன் விளைவாக, 1911ம் ஆண்டின் இறுதியில் டில்லியில் நடந்த ஜார்ஜ் மன்னனின் மகுடாபிஷேக வைபவத்தின்போது வங்கப் பிரிவினை நீக்கப்பட்டது; வங்கம் மீண்டும் ஒன்று பட்டது. ஆனால் இந்தத் தேசிய இயக்கத்தோடு கலந்து 1908ம் ஆண்டுத் தொடக்கத்தில் பாப்னு என்ற இடத்தில் நடந்த வங்க மாகாண அரசியல் மகாநாட்டில் தலைமை வகித்துப் பிரசங்கம் புரிந்த தாகூர், வங்கம் ஒன்றுபடுவதற்கு முன்பே, அதே ஆண்டில் தேசிய இயக்கத்தில் நேரடியாகப் பங்கு கொள்வதினின்றும் விலகி, தாம் அதற்கு முன்பே தொடங்கியிருந்த சாந்தி நிகேதனுக்குள் அடங்கிப் போய் விட்டார். ஆம், பாரதி தேசிய இயக்கப் பிரவாகத்தில் குதித்து, அந்தப் பெருவெள்ளத்தோடு கலந்து செல்லத் தொடங்கிய காலத்தில், தாகூர் அந்த வெள்ளத்திலிருந்து விலகிக் கரையேறி நின்றுவிட்டார். இதன்பின்னர் அவர் தமது இறுதிக்காலம் வரையிலும் அரசியலில் தீவிரமாகப் பங்கெடுக்கவில்லை யென்றே சொல்லலாம். இதனைக் குறித்து பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியுள்ள கூற்று தாகூரை நாம் புரிந்துகொள்ள உதவும். "அவர் (தாகூர்) ஒன்றும் அரசியல் வாதியல்ல. எனினும் கவிதையும் பாட்டுமான தந்தக் கோபுரத்தில் என்றென்றும் தங்கியிருக்க இயலாத அளவுக்கு அவர் உணர்ச்சி வசப்பட்டவராகவும், சுதந்திரத்தில் ஈடுபாடு கொண்டவராகவும் இருந்தார். தாம் சகித்துக்கொள்ள முடியாத அளவுக்கு எந்தவொரு நிலைமையேனும் வளர்ந்து உருவாகும்போதெல்லாம், அவர் அடிக்கடி அதிலிருந்து (தந்தக் கோபுரத்திலிருந்து) வெளிவந்து, தீர்க்கதரிசனமான பாஷையில் ஆங்கில அரசாங்கத்தையோ, அல்லது தமது

நாட்டு மக்களேயோ எச்சரிக்கை செய்தார்.'' (இந்திய தரிசனம் : நேரு). தாகூர் நேரடியான அரசியல் இயக்கத் திலிருந்து விலகிக்கொண்ட போதிலும்கூட, நாம் அவரது தேசபக்தியையும் சுதந்திர வேட்கையையும் குறைத்து மதிப் பிடுவதற்கில்லை. கவிஞர் என்ற முறையில் மனிதாபிமான உணர்ச்சியோடு இலக்கியப் படைப்புப் படைக்க முனைந்த தாகூர் அதே மனிதாபிமான வேட்கையின் மூலமாகத் தேசம் முழுவதையும் அரவணைத்தார். பாரதியோ தேச பக்திக் கவிஞராக உருவாகி, அந்தத் தேசபக்தியின் மூலமாகவே மனிதாபிமான உணர்ச்சியைப் பன்முகமான திருஷ்டியோடும் வளர்த்துக்கொண்டுவிட்டார்.

கடவுள் பெருமூச்செறிந்துவிட்டுப் பின்வருமாறு குறைப்பட்டுக் கொண்டார்: 'என்னைப் புறக்கணித்துவிட்டு, எனது சேவகன் என்னைத் தேடி ஏன் அலையப் புறப்படுகிறான்?' "

(தோட்டக்காரன் : கவிதை 75.)

இந்தக் கவிதைக் கதையில் வரும் துறவியைப் புத்தன் என்று தாகூர் பெயர் குறிப்பிட்டுச் சொல்லவில்லைதான். என்றாலும் இந்தக் கவிதை புத்தன் துறவு போன்ற ஒரு நிலையைச் சுட்டிக்காட்டுவதுதான் என்பதை நாம் எளிதில் உணர்ந்து கொள்ளலாம். பாரதியும் புத்தனை இவ்வாறு தான் பார்த்தார். புத்த மதத்தைப் பற்றிப் பாரதி பின்வருமாறு எழுதியுள்ளார்: "பாரத தேசத்தில் புத்த மதம் ஜீவகாருண்யம், சர்வஜன சமத்துவம் என்ற இரண்டு தர்மங்களையும் நெடுந்தூரம் ஊன்றும்படி செய்தது. ஆனால் உலக வாழ்க்கையாகிய ஜகத்தின் ஒளி போன்றவளாகிய பத்தினியைத் துறந்தவர்களே மேலோர் என்று வைத்து, அவர்களுக்குக் கீழே மற்ற உலகத்தை அடக்கி வைத்து, உலகமெல்லாம் பொய் மயம் என்றும், துக்க மயம் என்றும் பிதற்றிக்கொண்டு வாழ்நாளைக் கழிப்பதே ஞான நெறியாக ஏற்படுத்தி, மனுஷ நாகரிகத்தை நாசம் செய்ய முயன்றதாகிய குற்றம் புத்த மதத்துக்குண்டு." (பகவத்கீதை மொழிபெயர்ப்பு : முன்னுரை). இதனால் தான் பாரதி தாம் எழுதியுள்ள "பொய்யோ, மெய்யோ?" என்ற பாடலில் பின்வருமாறு எழுதினார் :

**வானகமே, இளவெயிலே, மரச்செறிவே,**
**நீங்க ளெல்லாம்**
**கானலின் நீரோ?—வெறுங்**
**காட்சிப் பிழைதானோ?**
**போனதெல்லாம் கனவினைப்போல்**
**புதைந்தழிந்தே போனதனால்**

# 5

## மகாகவிகளின் மனிதாபிமானம்

தாகூர், பாரதி இருவருமே தலைசிறந்த மனிதாபி மானக் கவிஞர்கள். இவர்களது மனிதாபிமானத் தன்மை கொண்ட தத்துவ தரிசனத்தை வழங்கி உருவாக்கிய சக்திகள் கிட்டத்தட்ட ஒரே மாதிரியானவை என்றே சொல்லலாம். இந்தச் சக்திகளுக்கும் இவர்களது படைப்புக்களுக்கும் உள்ள உறவைப்பற்றி ஆராய்வதற்கு இச் சிறு நூலில் இடமில்லை. இந்திய நாட்டின் பழம்பெரும் தத்துவமான வேதாந்தம், உபநிஷத்தின் பிரம்மஞானம், இந்திய நாட்டின் பக்தி இலக் கியங்கள், இந்து மதத்தோடு சேர்த்து வளர்த்த பண்டைப் பெருநூல்கள், இந்தியப் பழம் பேரிலக்கியங்கள், வங்கத்தின் இலக்கியத் தேசிய மறுமலர்ச்சியின்போது தோன்றிய வங்க இலக்கியப் படைப்புக்கள், அப்போது வெளியிடப்பெற்ற பல்வேறு கருத்துக்கள், ஷெல்லி, கீட்ஸ் போன்ற ஆங்கில நாட்டுக் கவிஞர்களின் படைப்புக்கள் ஆகிய சக்திக ளெல்லாம் இருவருக்குமே ஊட்டமளித்து, அவர்களது கருத் தோட்டத்தை உருவாக்கின என்று சொல்ல வேண்டும். இரு கவிஞர்களும் உலகு தழுவிய மனிதாபிமானத்தை வெளியிட்ட போதிலும், அந்த மனிதாபிமானத்தைப் பண்டைய இந்திய தத்துவங்கள், இலக்கியங்கள் ஆகிய வற்றிலிருந்தே சுவீகரித்து, அதனைத் தமதாக்கி வளர்த்துக்

கொண்டார்கள். இதன் காரணமாக, இவர்கள் பழமையின் பிடிப்பிலிருந்து பூரணமாக விடுதலை பெற்றுவிடாமல், பண்டைத் தத்துவங்களில் காணும் பல்வேறு முரண்பாடு களையும் அங்கீகரித்துக்கொண்டு, அவற்றின் அஸ்திவாரத் திலேயே தமது மனிதாபிமானத்தைக் கட்டி வளர்த்தார்கள். இதனால் வேதாந்த சாரத்திலிருந்த மனிதாபிமானத் தன்மையைக் கட்டிக் காத்து, அதனை நடைமுறை வாழ்க்கை யில் பிரயோகித்துப் பார்க்கத் தூண்டிய விவேகானந்தரைப் போல், இவர்களும் இந்திய நாட்டின் பண்டைக் கலாசாரப் பாரம்பரியமே உலகுக்கெல்லாம் வழிகாட்டும், வழிகாட்ட வேண்டும் என்று நம்பினார்கள். எனவே நம்மிடையே நிலவிய சிறுமைகளைக் கண்டிக்கத் தவறாத அதே நேரத்தில், இந்தியத் தத்துவ தரிசனமே உலகுக்கெல்லாம் ஒளி வழங்கும் என்பதிலும் அழுத்தமான உறுதிகொண்டிருந் தார்கள்.

இதனால்தான் பாரதி "இந்தியனாகப் பிறந்திருப்பதே பெரிய பாக்கியம்" (பாரதி புதையல்—2: ரா. அ. பத்மநாபன் தொகுப்பு) என்ற தலைப்பில் கட்டுரை எழுதினார். தாகூர், "எனது பிறப்பு புண்ணியமானது, ஏனெனில் நான் இந்த நாட்டில் பிறந்திருக்கிறேன்" என்று பாடினார். இந்தியராகப் பிறந்திருப்பதில் பெருமையும் களிப்பும் கொண்ட இந்தக் கவிஞர்கள் இந்தியாவே உலகுக் கெல்லாம் வழிகாட்டும் என நம்பினார்கள். கீழைநாட்டு, மேலைநாட்டு உறவுகளைப்பற்றி எழுதும்போது, தாகூர் பின்வருமாறு எழுதினார்: "நைல் நதிக்கரையின் பருவக் காற்று கங்கை நதிக்கரையின் தூரா தொலைக்கரைகளைச் செழிக்கச் செய்கிறது. அதேபோல் கீழைநாட்டிலிருந்து மேலைநாட்டுக் கரைகளுக்குக் கருத்துக்களும் எல்லை கடந்து சென்று அங்குள்ள மனிதர்களின் இதயங்களில் நல்வரவு பெற்று, அவர்களது நம்பிக்கையை நிறைவேற்ற வேண்டும்." மேலும் இதனைத் தாகூர் அமெரிக்கா சென் றிருந்த காலத்தில், அங்கு அவர் நிகழ்த்திய பிரசங்கங்களில்

தெளிவாகக் காண முடிகிறது. அமெரிக்காவில் பேசும் போது, "நாங்கள் இப்போது புழுதியோடு புழுதியாய் விழுந்து கிடந்தாலும் எங்கள் பூமி புண்ணிய பூமி. உங்களுடைய செல்வத்தின்மீது தெய்வத்தின் சாபம் இருக்கிறது" என்று கூறினர் தாகூர். தாகூரின் இந்தக் கூற்றை ஆதரித்து, பாரதியும் தமது கட்டுரையொன்றில் (கட்டுரைகள் : சமூகம்) பின்வருமாறு எழுதியுள்ளார் : "நாங்கள் தெய்வத்தையும் தர்மத்தையும் நம்பியிருக்கிறோம். கீழே விழுந்தாலும் மறுபடி எழுந்துவிடுவோம். அமெரிக்கா விழுந்தால் அதோ கதி. ஆதலால் இனிமேலேனும் ஹிந்து தர்மத்தை அனுசரித்து, உலகம் முழுவதிலும் எல்லாத் தேசத்தாரும் உடன்பிறப்பென்றும், சமானமென்றும் தெரிந்து கொண்டு, பரஸ்பரம் அன்பு செலுத்தினல் பிழைக்கலாம் என்று ரவீந்திரர் அவர்களுக்குத் தர்மோபதேசம் செய்கிறார்" மேலும் மேலை நாடுகளுக்கு மட்டுமல்லாமல், கீழை நாடுகளுக்கும் இந்தியாதான் வழிகாட்டும், தலைமை தாங்கும் என்றும் இரு கவிஞர்களும் நம்பினர். தாகூரின் ஜப்பானியப் பிரசங்கமொன்றின் கருத்தைப் பாரதி தமது கட்டுரை யொன்றில் (கட்டுரைகள் : தத்துவம்) பின்வருமாறு குறிப்பிடுகிறார் : அதன் சாராம்சம்: "உறங்கின ஆசியாவை ஜப்பான் எழுப்பிவிட்டது. அதன் பொருட்டு நாமெல்லோரும் ஜப்பானுக்கு நன்றி செலுத்த வேண்டும். உறங்கும் பூமண்டலத்தைப் பாரத நாடு தலைமையாக, ஆசியா எழுப்பிவிடப் போகிறது." பாரதியும் இதே கருத்தைக் கொண்டிருந்ததால்தான், "முப்பது கோடி ஜனங்கள் சங்க முழுமைக்கும் பொதுவுடைமை" வேண்டுமெனப் பாட வந்த பாரத சமுதாயப் பாட்டில்கூட, பின்வருமாறு பாடியுள்ளார் :

**"எல்லா உயிர்களிலும் நானே இருக்கிறேன்"**
**என்றுரைத்தான் கண்ண பெருமான்!**

எல்லாரும் அமர நிலை எய்து நன்முறையை
இந்தியா உலகிற் களிக்கும்—ஆம்,
இந்தியா உலகிற் களிக்கும்—ஆம், ஆம்
இந்தியா உலகிற் களிக்கும்!

ஆம், ஆம், ஆம் என்று முக்காலும் முழங்கி அழுத்தமாகவும் ஆணித்தரமாகவும் பாடும் பாரதியின் இந்த நம்பிக்கையும் சரி, தாகூரின் நம்பிக்கையும் சரி, இரண்டும் இந்திய நாட்டுத் தத்துவ மேன்மை பற்றிய எண்ணத்திலும் பிடிப் பிலும் உறுதியிலும் இருந்துதான் உதயமாகியுள்ளன என்பது வெளிப்படை.

இந்திய தத்துவ தரிசனத்தின் அடிப்படையில் நின்றே உலகு தழுவிய மனிதாபிமானக் கண்ணோட்டத்தை வளர்த்துக் கொண்ட இந்தக் கவிஞர்களின் அனுபவத் திலும் ஒரு வித்தியாசம் உண்டு. தாகூர் உலகமெல்லாம் சுற்றிய கவிஞர்; உலக மக்களை நேரே கண்டவர். பாரதியோ இந்திய மக்களை மட்டுமே நேரில் கண்டவர். எனவே தாகூரின் இந்த மனிதாபிமானம் அறிவு பூர்வமாகவே உரம் பெற்றதென்றும், பாரதியின் மனிதாபி மானம் உணர்வு பூர்வமாக உருவாயிற்றென்றும் கூறலாம். இவ்வாறு உருவாவதற்கு இவ்விருபெரும் புலவர்களும் வாழ்ந்த காலச் சூழ்நிலையும், வாழ்க்கைச் சூழ்நிலையுமே காரணங்கள் என நாம் கொள்ளலாம்.

தாகூரும் பாரதியும் இந்திய நாட்டின் பண்டைய தத்துவங்களிலும் மத இலக்கியங்களிலும் ஈடுபாடு கொண்டு, அவற்றிலே காலூன்றி நின்ற போதிலும், அந்தத் தத்துவங்களில் புகுந்துவிட்ட மாயாவாதச் சகதியிலும், அநித்தியக் கோட்பாட்டிலும் இருவருமே சிக்கிக் கொள்ளவில்லை. அதேபோல் இருவரும் எந்த ரூபமான துறவறத்தையும் அங்கீகரிக்கவில்லை. தாகூர் தமது நினைவுக் குறிப்புக்களில், "இந்த உலகம் இனியது. நான் மாள விரும்பவில்லை. என்றென்றும் நிரந்தரமான மானுட வாழ்வையே நான்

வாழ விரும்புகிறேன்" என்று இந்த உலகத்தின் உறுதிப் பாட்டை வற்புறுத்தி எழுதியுள்ளார். மேலும், "விமோசனமா? இந்த விமோசனத்தை எங்கே கண்டறிவது? ஆண்டவனே சிருஷ்டித் தளைகளைத் தன் மீது ஆனந்தத்தோடு அணிந்து கொண்டிருக்கிறான். அவன் நம்மனைவரோடும் என்றென்றும் கட்டுண்டு கிடக்கிறான்" (பாடல் : 11) என்றும், "துறவிலே எனக்கு விமோசனமில்லை. இன்பத் தளைகள் ஆயிரக் கணக்கில் என்னைப் பிணிப்பதில்தான் நான் சுதந்திரத்தின் அரவணைப்பை உணர்கிறேன்...நான் எனது புலன்களின் கதவுகளை என்றும் அடைக்க மாட்டேன். பார்த்தல், கேட்டல், ஸ்பரிசித்தல் ஆகிய இன்பங்கள் எனது இன்பத்தைத் தாங்கி நிற்கின்றன. ஆம், எனது கனவுகளெல்லாம் ஆனந்தத்தின் ஜோதியாகச் சுடர்விட்டு எரியும்; எனது வேட்கைகளெல்லாம் அன்பின் கனிகளாகப் பழுத்துக் கனியும்!" (பாடல் : 73) என்றும் தமது "கீதாஞ்சலி"யில் வாழ்க்கையின்பத்தையும், அதன் அநித்தியமற்ற, மாயையற்ற தன்மையையும் வற்புறுத்தி எழுதியுள்ளார். பாரதியும் இதைப் போலவே,

> **வான முண்டு; மாரி யுண்டு;**
> **ஞாயிறும் காற்றும் நல்ல நீரும்**
> **தீயும் மண்ணும் திங்களும் மீன்களும்,**
> **உடலும் அறிவும் உயிரும் உளவே;**
> **தின்னப் பொருளும், சேர்ந்திடப் பெண்டும்,**
> **கேட்கப் பாட்டும், காணநல் லுலகும்**
> **களித்துரை செய்ய கணபதி பெயரும்**
> **என்றுமிங் குளவாம்! சலித்திடாய்!....**

என்று உலக வாழ்க்கையின் இன்பத்தை வகுத்து வலியுறுத்திக் கூறி, நெஞ்சுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டுகிறார். (விநாயகர் நான்மணிமாலை).

'உலக வாழ்க்கை இனியது; இந்த இனிமையைத் துறந்து, துறவு பூண்டு உண்மையைத் தேட வேண்டிய

தில்லை' என்ற கருத்தில் தாகூருக்கும் உடன்பாடு உண்டு என்று மேலே கூறினோம். இதனால்தான் கௌதம புத்தரின் மனிதாபிமானத்திலும், பௌத்தக் கதைகளிலும் ஈடுபாடு கொண்டு, அவற்றைத் தமது பாக்கள் பலவற்றில் கவிப் பொருளாக்கிப் பாடியுள்ள போதிலும்கூட, புத்தர் தமது மனைவி மக்களைத் துறந்து துறவறம் நாடிச் சென்றதைத் தாகூர் ஆதரிக்கவில்லை. இதனை அவர் எழுதிய "தோட்டக் காரன்" (மாலி) என்ற கவிதைத் தொகுதியிலுள்ள ஒரு கவிதையின் மூலம் அறியலாம். அந்தக் கவிதைப் பொருள் வருமாறு:

"நடுராத்திரியில் துறவியாகப் போகிறவன் பின் வருமாறு பேசினான்:

'எனது வீட்டைத் துறந்து கடவுளைத் தேடிப் புறப்படு வதற்கு இதுதான் சமயம். ஆ! இந்த மாயையில் இங்கு என்னை இத்தனை காலம் பிணித்து வைத்திருந்தது யார்?'

'நான்தான்' என்றார் கடவுள். ஆனால் அந்த மனிதனின் காதுகள் அடைபட்டுப் போயிருந்தன.

மார்பின்மீது படுத்துறங்கும் குழந்தையோடு அவனது மனைவி படுக்கையின் ஒரு பக்கத்தில் அமைதியாகத் தூங்கியவாறு படுத்துக் கிடந்தாள்.

'என்னை இத்தனை காலம் முட்டாளாக்கிவிட்ட நீங்க ளெல்லாம் யார்?' என்று அவன் பேசினான்.

'அவர்கள்தான் கடவுள்' என்று மீண்டும் அந்தக் குரல் பேசியது. ஆனால் அவன் அதைக் கேட்கவில்லை.

அந்தக் குழந்தை தனது கனவில் அழுதுகொண்டே, தாயோடு மேலும் ஒண்டி அரவணைத்துக் கொண்டது.

'முட்டாளே! நில், உனது வீட்டை விட்டுச் செல்லாதே' என்று ஆணையிட்டார் கடவுள். ஆனால் அப்போதும் அவன் அதைக் கேட்கவில்லை.

நானுமோர் கனவோ?—இந்த
ஞாலமும் பொய்தானே?
காண்பதுவே உறுதி கண்டோம்;
காண்பதல்லால் உறுதியில்லை;
காண்பது சக்தியாம்—இந்தக்
காட்சி நித்தியமாம்....

இதே பாடலுக்கு அவர் எழுதியுள்ள முன்னுரையிலும் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் :

" 'இந்த உலகமே பொய்' என்று நமது தேசத்தில் ஒரு சாஸ்திரம் வழங்கி வருகிறது. சந்நியாசிகள் இதை ஓயாமல் சொல்லிக்கொண்டிருக்கட்டும். அதைப்பற்றி இந்த நிமிஷம் எனக்கு வருத்தமில்லை. குடும்பத்திலிருப்போருக்கு அந்த வார்த்தை பொருந்துமா? நடுவீட்டில் உச்சரிக்கலாமா? அவச் சொல்லன்றோ? நமக்குத் தந்தை வைத்துவிட்டுப் போன வீடும் வயலும் பொய்யா? தங்கச்சிலைபோல நிற்கிறாள் மனைவி, நமது துயரத்துக்கெல்லாம் கண்ணீர் விட்டுக் கரைந்தாள்; நமது மகிழ்ச்சியின்போதெல்லாம் உடல் பூரித்தாள்; நமது குழந்தைகளை வளர்த்தாள். அவள் பொய்யா? குழந்தைகளும் பொய்தானா? பெற்றவரிடம் கேட்கிறேன். குழந்தைகள் பொய்யா? நமது வீட்டில் வைத்துக் கும்பிடும் குலதெய்வம் பொய்யா? வீடுகட்டிக் குடித்தனம் பண்ணுவோருக்கு மேற்படி சாஸ்திரம் பயன்படாது."

உலக வாழ்க்கையைப் பற்றிப் பாரதி இவ்வாறு கருதிய காரணத்தால்தான்,

"கவலை துறந்துஇங்கு வாழ்வதே வீடு"

"ஒன்று பரம்பொருள்; நாமதன் மக்கள்
உலகு இன்பக் கேணி"

என்றெல்லாம் அவர் பாடினார். யோகத்தைப் பற்றிக் கூறும் போதோ,

**ஊருக் குழைத்திடல் யோகம்—நலம்**
**ஓங்கிடு மாறு வருந்துதல் யாகம்**

என்று புதிய இலக்கணமே வகுத்து விடுகிறார். தாகூரோ, "எவனொருவன் மனிதனுக்குச் சிறந்த சேவை செய்கிறானோ, அவனே கடவுளுக்குச் சிறந்த சேவை செய்தவனாகிறான்" என்று அருமையாகக் கூறி விடுகிறார்.

இவ்வாறு உலகத்தையும் உலக வாழ்க்கையையும், உலகத்திலுள்ள மக்களையும் இருவரும் நேசித்த காரணத்தால், இருவரும் தெய்வ பக்தியையும் மனிதாபிமானத்தையும் இணைத்து நோக்கிய காரணத்தால், அவர்கள் உலக மக்களிடத்திலேயே ஆண்டவனின் திருவுருவையும் கண்டுவிடுகிறார்கள். கோயிலுக்குள்ளே போய்க் கடவுளைத் தேடும் குருக்களை நோக்கிப் பேசுவதுபோல் தாகூர் தமது "கீதாஞ்சலி"யில் பின்வருமாறு பாடுகிறார் :

"மாலையுருட்டுவதையும், மந்திரம் ஜெபிப்பதையும், பாடுவதையும் நிறுத்து. எல்லாக் கதவுகளும் அடைபட்டுக் கிடக்கும் கோவிலின் இருண்ட, தனிமையான மூலையில் நீ யாரையப்பா பூசிக்கின்றாய்? உன் கண்களைத் திறந்து, கடவுள் உன் முன்னிலையில் இல்லை என்பதைத் தெரிந்துகொள்.

"எங்கே உழவன் கட்டாந்தரையைப் பிளந்து உழுகின்றானோ, எங்கே சாலை அமைப்பவன் சரளைக்கல் உடைக்கின்றானோ, அங்கேதான் இருக்கிறான் அவன். அவன் அவர்களோடு வெயிலிலும் மழையிலும் சேர்ந்து நிற்கிறான். உனது புனிதமான அங்கியைக் களைந்துவிட்டு, அவனைப் போலவே பூமிப் புழுதிக்கு இறங்கி வா.

"உன்னுடைய தியானங்களை விடுத்து வெளியே வா. உனது களப கஸ்தூரிகளையும், பூக்களையும் ஒரு பக்கத்திலே ஒதுக்கி வை. உன்னுடைய ஆடைகள் கிழிந்தும் கறை படிந்தும் போனால் என்ன மோசம் வந்துவிட்டது? அவனை

*வந்து பார். உனது உழைப்பிலும் நெற்றி வியர்வையிலும் அவனோடு இணைந்து நில்.*"

(பாடல் : 11)

*தாகூர் எவ்வாறு ஏழைப்பட்ட, உழைக்கும் மக்களிடத்திலே கடவுளைக் காண்கிறாரோ, அதேபோல் பாரதியும் (தொழில் : கவிதை) காணத்தான் செய்கிறார் :*

**இரும்பைக் காய்ச்சி உருக்கிடு வோரே!**
**எந்தி ரங்கள் வகுத்திடு வோரே!**
**கரும்பைச் சாறு பிழிந்தெடுப் பீரே!**
**கடலில் மூழ்கி நன்முத் தெடுப்பீரே!**
**அரும்பும் வியர்வை உதிர்த்துப் புவிமேல்**
**ஆயிரம் தொழில் செய்திடு வீரே!**
**பெரும்புகழ் நுமக்கே இசைக்கின்றேன்;**
**பிரம தேவன் கலைஇங்கு நீரே!**

*எனத் தொடங்கி, மேலும் மண்ணெடுத்துக் குடங்கள் செய்வோர், மரத்தை வெட்டி வீடு கட்டுவோர், காய்கனி விளைப்போர், உழுது பயிரிடுவோர், எண்ணெய், பால், நெய் கொணர்வோர், இழை நூற்று ஆடை நெய்வோர், பாட்டும் செய்யுளும் கோத்திடும் கவிஞர், பரத நாட்டியக் கூத்திடுவார், சாஸ்திர விற்பன்னர் என்றெல்லாம் பலரையும் வாழ்த்திவிட்டு, இறுதியிலே பின்வருமாறு முத்தாய்ப்பு வைக்கிறார் :*

**தேட்ட மின்றி விழிஎதிர் காணும்**
**தெய்வ மாக விளங்குவிர் நீரே!**

*இவர்கள் எல்லோருமே தேடிச்சென்று காணவேண்டிய அவசியமில்லாமல், கண்முன்னாலேயே பிண்டப் பிரமாணங்களாகத் தோன்றும் கடவுளர்களாகத் தோற்றமளிக்கிறார்கள் என்பதே பாரதியின் கூற்று.*

ஆனால் உழைப்பவர்களின் உருவில் ஆண்டவனைக் காண்பதில் இந்த இரு கவிஞர்களுக்கும் அடிப்படையிலேயே மாறுபாடான, வேறுபாடான கண்ணோட்டம் உண்டு என்பதை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். உழைக்கும் மக்களிடம் தாகூர் ஆண்டவனைக் காணும் தன்மை பரிவுணர்ச்சி மிகுந்த மனிதாபிமானத்தின் வெளியீடாகப் பிரதிபலிக்கிறது. அதனால்தான் அவர் ஆண்டவனை நோக்கி, "உமது திருப்பாதங்களுக்குரிய கால்மனை இதோ இருக்கிறது. உமது திருப்பாதங்கள் ஏழைப்பட்டவர்களும், தாழ்த்தப்பட்டவர்களும், திக்கற்றவர்களும் வாழ்கின்ற இடத்திலே தரித்து நிற்கின்றன" (கீதாஞ்சலி : 10) என்று பாடியுள்ளார். ஆனால் பாரதியின் கண்ணோட்டமோ இத்தகைய பரிவுணர்ச்சியின் விளைவாக எழுந்த கண்ணோட்டமல்ல. பாரதி உழைக்கும் மனிதனைப் பிரம தேவனாக, அதாவது சிருஷ்டிகர்த்தாவாகக் காண்கிறார். எனவே ஏழை எளியவர்கள் இருக்குமிடத்துக்கு இறங்கி வந்து நிற்கும் கடவுளாக அவர்களைக் காணாமல், அவர்களையே தெய்வ நிலைக்கு ஏற்றிவைத்து, தெய்வத்துக்குச் சமதையாக அவர்களை ஆக்கிப் பார்த்து விம்மிதம் அடைகிறார். ஆம், ஆக்க சக்தி மிகுந்த உழைப்பாளிகள் அனைவரையும் படைப்புக் கடவுளர்களாகப் பார்ப்பதில் பாரதி பெருமிதம் கொள்கிறார்.

# 6

## தொழில் வளர்ச்சியும், இரு கவிஞர்களும்

உழைப்பாளி மக்களிடம் கடவுளைக் காணும் மேற் கூறிய கண்ணோட்டத்தில் இரு கவிஞர்களுக்குமிடையே வேறுபாடான பார்வை இருப்பதற்கும் காரணம் உண்டு. இந்திய நாட்டில் தொழில் வளர்ச்சி ஏற்படவேண்டுமெனக் கனவு கண்டவர் பாரதி. தாம இயற்றிய "புதிய ஆத்திசூடி" யிலேயே "கைத்தொழில் போற்று", "கூடித் தொழில் செய்" என்றெல்லாம் அவர் ஆணையிட்டார். மேலும், கரத்தாலும் கருத்தாலும் உழைப்பவர்களிடையே, அதாவது உடல் உழைப்பால் உழைக்கும் மக்களையும், அறிவின் பலத் தால் உழைக்கின்ற அறிவாளிக் கூட்டத்தையும் ஒன்றாக்கி, அவர்களிடையே பேதம் காணாமல் எல்லோரையுமே அவர் உழைப்பாளிகளாகக் கருதினார். இதனாலேயே அவர் கலைமக ளைப்பற்றிப் பாடவரும்போதுகூட, "கை வருந்தி உழைப்பவர் தெய்வம்; கவிஞர் தெய்வம்" (வெள்ளைத் தாமரை) என்று இருசாராரையும் இணைத்துப் பாடுகிறார். மேலும், இரும்பைக் காய்ச்சி உருக்குவார், எந்திரங்கள் வகுப்பார் முதலிய எந்திரத் தொழிலாளர்களைப் பாராட்டிப் பாடும் அதே பாட்டில், பாட்டும் செய்யுளும் கோத்திடுவோரையும் இணைத்து, அவர்களையும் தொழிலாளர்களாகவே மதித்துப் பாடுகிறார்.

அதாவது பாமர மக்களின் உடல் உழைப்புக்கும், படித்த வர்க்கத்தாரின் மூளை உழைப்புக்கும் உயர்வு தாழ்வு இருப்பதாகக் கருதப்படும் மாய்மாலத் திரையைக் கிழித்தெறிந்து, இருவரையும் ஒன்றுக்கிக் காட்டுகிறார். ஆம், அவரது பார்வையில் கவிதை இயற்றுவதும், கன எந்திரங்களைச் சமைப்பதும் தொழிலாகத்தான் படுகிறது. இதனுல்தான் அவர் தம்மைப்பற்றிப் பாடும்போதும், "நமக்குத் தொழில் கவிதை" என்று பெருமிதத்தோடு பாடுகிறார். இத்தகைய கவிஞர் இந்திய நாட்டின் எதிர் காலம் பற்றிக் குறிசொல்ல வரும்போதோ,

**நல்லகாலம் வருகுது; நல்லகாலம் வருகுது;**
**வேத புரத்திலே வியாபாரம் பெருகுது;**
**தொழில் பெருகுது; தொழிலாளி வாழ்வான்...**
**எந்திரம் பெருகுது; தந்திரம் வளருது;**
**எட்டு லட்சுமியும் ஏறி வளருது!...**

என்று குடுகுடுப்பை அடிக்கிறார். தொழில் வளர்ச்சியைப் பற்றி அவர் இவ்வாறு கனவு கண்டதால்தான் அவர் பாடிய "பாரத தேசம்" என்ற பாட்டில், இந்திய நாட்டின் எதிர்கால எந்திரத் தொழில் வளர்ச்சிக்கான "ஐந்தாண்டுத் திட்டங்களையே" தீட்டுவதுபோல், பல்வேறு ஆணைகளை நமக்கு அடுக்கடுக்காய்ச் சொல்கிறார்.

**வெட்டும் கனிகள் செய்து தங்கம் முதலாம்**
**வேறுபல பொருளும் குடைந்தெடுப்போம்;**
**எட்டுத் திசைகளிலும் சென்றிவை விற்றே**
**எண்ணும் பொருளனைத்தும் கொண்டு வருவோம்...**
**காசி நகர்ப் புலவர் பேசும் உரைதான்**
**காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்...**
**பட்டினில் ஆடையும் பஞ்சில் உடையும்**
**பண்ணி மலைகளென வீதி குவிப்போம்;**
**கட்டித் திரவியங்கள் கொண்டு வருவார்**
**காசினி வணிகருக்கு அவை கொடுப்போம்.**

**ஆயுதம் செய்வோம்; நல்ல காகிதம் செய்வோம்;**
**ஆலைகள் வைப்போம்; கல்விச் சாலைகள் வைப்போம்;...**
**நடையும் பறப்புமுணர் வண்டிகள் செய்வோம்;**
**ஞாலம் நடுங்கவரும் கப்பல்கள் செய்வோம்...**
**சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவோம்...**
**சந்தி தெருப் பெருக்கும் சாத்திரம் கற்போம்....**
**கலை வளர்ப்போம்; கொல்லருலை வளர்ப்போம்...**
**ஓவியம் செய்வோம்; நல்ல ஊசிகள் செய்வோம்;**
**உலகத் தொழிலனைத்தும் உவந்து செய்வோம்!**

இவ்வாறு கவிதையில் மட்டுமல்லாமல், பாரதி தாம் எழுதிய பல கட்டுரைகளிலும் தொழில்வளர்ச்சி, வர்த்தகப் பெருக்கம் ஆகியவற்றின் அவசியத்தை வற்புறுத்தியுள்ளார். "வருங்காலம்" (கட்டுரைகள் : சமூகம்) என்ற கட்டுரையில் அவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"உலகம் எவ்வளவு தீவிரமாக மாறிக்கொண்டு வருகிறது என்பதைத் தமிழ் நாட்டார் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். ஒவ்வொருவரும் சிற்சில விவகாரங்களில் மனத்தைப் பதிய வைத்துக்கொண்டு, வெளியுலகத்தின் மாறுதல்களிலே புத்தி செலுத்தாமல், அற்ப விருப்பங்களிலும் அற்பச் செயல் களிலும் நாளையெல்லாம் கழியவிட்டு, கிணற்றுத் தவளைகள் போல் வாழ்வதிலே பயனில்லை. வர்த்தகம் செய்வோர் கோடிக்கணக்கான பணப்புழக்கம் ஏற்படும்படி பெரிய வர்த் தகங்கள் செய்ய வழி தேட வேண்டும்......ராஜதந்திரிகளும் மந்திரிகளும் கண்டு வியக்கும்படியான பெரிய பெரிய யோசனைகள் செய்து நிறைவேற்றிப் புகழ் பெறவேண்டும். கைத்தொழில்களின் விஷயத்திலே நாம் இப்போது காட்டி வரும் சோர்வும் அசிரத்தையும் மிகவும் அருவருப்புக்கு இடம் தருகின்றன....நம்முள்ளே கல்வியும் செல்வமும் உடையோர் கூடி ஆராய்ச்சிகள் செய்து, வெளிநாடுகளில் ஆவலுடன் வாங்கக்கூடிய மாதிரிகள் எவை என்பதைக் கண்டுபிடித்து, அவற்றை நமது தொழிலாளர்களைக் கொண்டு செய்வித்தால் மிகுந்த லாபமுண்டாகும். இரும்புத்தொழில் உலகத்திலே

வலிமையும் செல்வமும் கொடுப்பது. எல்லாவிதமான கைத்தொழில்களும் தற்காலத்தில் இரும்பு எந்திரங்களாலேயே செய்யப்படுகின்றன. ஆதலால் நமது தேசத்துக் கொல்லருக்கு நாம் பலவிதங்களிலே அறிவுறுத்தியும், ஜீவன சௌகர்யங்களும் ஏற்பாடு செய்து கொடுத்தும், இடத்துக்கிடம் இயன்றவரை இரும்புத் தொழில்களை வளர்க்க வேண்டும்...''

மேலும், ''புதிய உயிர்'' என்ற கட்டுரையிலும் பாரதி தொழில் வளர்ச்சியை வற்புறுத்திப் பேசுகிறார். ''மேன்மை நிலை பெற வேண்டுமால், கைத்தொழில்கள் பெருகும்படி செய்ய வேண்டும். சாத்தியமில்லை என்று சொல்லி ஏங்குவதிலே பயனில்லை. எப்படியேனும் செல்வத்தை வளர்க்க வேண்டும். சோம்பேறியாக ஒருவன் பணத்தைக் குவித்து வைத்துக்கொண்டு, அக்கம் பக்கத்து ஜனங்கள் பட்டினி கிடந்து சாவதைப் பார்த்துக்கொண்டிருப்பது மிகவும் கொடிய பாவம். கைத்தொழில்களும் வியாபாரங்களும் ஏற்படுத்தி, அக்கம்பக்கத்தாரிடம் சரியானபடி வேலை வாங்கிக் கொண்டு, சரியானபடி கூலி கொடுக்கவேண்டும்'' என்று பணக்காரர்கள் தொழில் வளர்ச்சிக்கான துறையில் முதலீடு செய்து எந்திரத் தொழில்களைப் பெருக்க வேண்டும் என்று யோசனை கூறுகிறார்.

பாரதிக்கு ''இரும்புத் தொழில் உலகத்திலே வலிமையும் செல்வமும் கொடுப்ப''தாகத் தோன்றுகிறது. ஆனால் எந்திர வளர்ச்சியைப்பற்றிய தாகூரின் கருத்தோ இதற்கு நேர் மாறாகவே உள்ளது. எந்திர வளர்ச்சியே அவருக்குப் பூதபைசாசமாகத் தோன்றியது. எந்திரத்தைப் பற்றித் தாகூர் ஒரு கவிதை எழுதியுள்ளார். அதன் கருத்துரை வருமாறு :

''எந்திரமே! எல்லோரும் உன்னை வாழ்த்துகிறார்கள்; நாங்கள் உன்னைத் தொழுகிறோம்; உன்னை வணங்குகிறோம்; உன்னைக் கௌரவிக்கிறோம்! எந்திரமே! ஓ, எந்திரத்

தெய்வமே! உனது தீப்பிழம்புகளும் இடி முழக்கமும் வானத்தைக் கிழிபடச் செய்கின்றன. கடகடத்து உருளும் உன் சக்கரங்களெல்லாம் வேகமும் பேரொலியும் மிகுந்த காம்பீரியத்தோடு எதிரொலிக்கின்றன. எந்திரமே! உனக்கு நாங்கள் தலை வணங்குகிறோம். உனது ஒரேயொரு மூர்க்கமான பாய்ச்சல் உலகத்தையே தூர்த்துத் துடைக்கும் வெற்றிகரமான அனற்பிழம்புகளை உருட்டி விட்டுவிடுகின்றது எந்திரமே! ஓ, எந்திரக் கடவுளே! உனது சக்தி உறுதியான கனித்தாதுவை உருக்கிவிடுகிறது; பழம் பெரும் பாறையின் ஜீவனுள்ள வித்தையே நொறுக்குகிறது; பண்டைக் காலத்தின் நிலையான பொருட்களையெல்லாம் உடைத்துத் தள்ளுகிறது. எல்லோரும் வாழ்த்துகிறார்கள்! எல்லோரும் வாழ்த்துகிறார்கள்! எந்திரமே! நீ ஒரு கழுகு; உனது கூரிய நகங்கள் பூமியின் குடலை உருவிப் பிடுங்கி, வெளியே விரித்துப் போடுகின்றன. எந்திரமே! எந்திரத் தெய்வமே! நீ ஒரு மேகம்; உனது நிழலின்கீழ் பூமியையும், வானத்தையும், கடலையும் இருளடிக்கச் செய்யும் பொல்லாத புயல்கள்தான் தாவிப் பறக்கின்றன. எந்திரமே! எந்திரமே! எல்லோரும் உன்னை வாழ்த்துகிறார்கள். நீயோ இரக்கமற்ற மந்திரவாதி; நீ பூதப் பொருள்களையெல்லாம் உன் இஷ்டப்படி கட்டுண்ண வைத்திருக்கிறாய். எந்திரமே! எல்லோரும் உன்னை வாழ்த்துகிறார்கள்! நீயோ உலகத்தையே உனது பணயக் கைதியாகச் சிறைப்படுத்தியுள்ளாய். உனது சேவகர்களான நாங்களோ உன்னைத் தொழுகிறோம்...''

எந்திரங்களைக் கண்டு தாகூர் எவ்வளவு தூரம் பயந்திருக்கிறார் என்பதற்கு இந்தப் பாடல் தக்க சான்றாகும் ''வெட்டுக் கனிகள் செய்து தங்கம் முதலாம் வேறுபல பொருளும் குடைந்தெடுப்போம்'' என்று பாரதி சுரங்கத் தொழிலை வரவேற்றுப் பாடுகிறார். தாகூருக்கோ அது பூமாதேவியின் குடலை உருவி மாலை போடும் கொலைகாரச் செயலாகத் தோன்றுகிறது; எந்திரத்தின் வேகம் பூமியையே தூர்த்துத்

துடைக்கும் அசுரனுகப் படுகிறது. மேலும் அதன் நிழலின் கீழ் உலகமே இருளடித்துப் போகிறது. அதற்கு மனிதர்க ளெல்லாம் அடிமைகள். எந்திரமானது பகாசூரனைப்போல் மனிதர்களைப் பயமுறுத்துவதாக இருப்பதால், மக்கள் பயத் தால் அதற்கு வணக்கம் செலுத்துகிறார்கள்! எந்திரத்தை இவ்வாறுதான் தாகூர் பார்க்கிறார். அதன் ஆக்க சக்தியைப் பற்றியும், அதனால் கிட்டும் பலன்களையும் பற்றிய நினைவே அவருக்கு எழவில்லை. தாகூரின் இந்தக் கருத்தை அவர் அமெரிக்காவில் பேசிய "இந்தியாவில் தேசியம்" என்ற தலைப் புள்ள பிரசங்கத்திலும் நாம் காண்கிறோம். அப்போது அவர் பேசியதாவது :

"இன்று உலகில் காணப்படும் பெரிய கைத்தொழில் ஸ்தாபனங்களிலேயே எனக்கு நம்பிக்கையில்லை. அவை குரூபமாக இருப்பதே சிருஷ்டியமைப்புக்கு அவை முரணாக இருக்கின்றன என்பதைக் காட்டுகிறது. இயற்கையின் மகத்தான சக்தியானது பயங்கரத்தில் தோற்றமளிப்ப தில்லை; அழகிலேயே காட்சி தருகிறது. எந்திர நாகரிக மானது இன்பத்தைப் பலியிட்டுப் பணத்தைத் திரட்டு கிறது. தான் நிறுவும் கருவிகளுக்கு அதிக பட்சமான இடமளிப்பதற்காக மனிதன் தனது மனிதப் பண்பைக் குறைந்தபட்ச அளவு ஒடுக்கிக் கொள்கிறான். மனித உணர்ச் சிகள் எந்திரங்களை லகுவில் ஏற்க மறுப்பதால், எந்திரங்களின் பாதையை மறிப்பதால், அந்த நல்லுணர்ச்சிகளை ஏளனம் பண்ணுகிறான் மனிதன்."

இதே போன்று ஜப்பான் நாடு எந்திரத் தொழில் வளர்ச்சியில் முன்னேறியுள்ளதையறிந்த தாகூர் அதனைக் குறித்து மிகவும் அச்சத்தோடு பின்வருமாறு எழுதி யுள்ளார் :

"இப்போது ஜப்பானிய நாகரிகத்தைப் பயமுறுத்தும் மாறுதலைக் கண்டு நான் எனது சரீரத்துக்கு நேரும் பயம் போல் அஞ்சுகிறேன், ஜப்பான் மானுடச் செல்வமெல்லாம்

நிறையப் பெற்றிருந்தது. இப்பொழுதோ மானுட ரத்தத்தைக் குடிக்கும் சாத்தானுடைய நாய்களை ஐரோப்பிய நாய்க்குகைகளிலேதான் வளர்க்கலாம் என்பதில்லை. ஜப்பானிலும் அவற்றைக் குடியேற்றி மனிதத் துன்பங்களை இரை போட்டு வளர்க்க முடியும் என்பதை நிருபணம் செய்து விட்டது......"

மேற்கண்ட கூற்றுக்களில் பிரதிபலிக்கும் தாகூரின் கருத்தென்ன? 'எந்திரம் அழகாக இல்லை; அது குரூபமாக உள்ளது; அது பயங்கரமானது. மனித உணர்ச்சிகள் எந்திரங்களை ஏற்க மறுக்கின்றன; அதன் பாதையை மறிக்கின்றன; மறிக்கின்ற அந்த உணர்ச்சிகளை மனிதன் கிண்டல் செய்கிறான். எந்திரங்கள் சாத்தானின் நாய்கள்; அவை மானுட ரத்தத்தைக் குடித்துவரும்'—இதுதான் அந்தக் கருத்தின் சாராம்சம். தாகூர் ஏன் எந்திரங்களை இவ்வாறு கருதினார் என்பதை நாம் புரிந்து கொள்வதற்கு முன், பாரதி இதைப் பற்றி என்ன தெரிவிக்கிறார் எனப் பார்ப்போம். "உலகத் தொழிலனைத்தும் உவந்து செய்வோம்" என்று பாரதி நமக்கு ஆணையிட்டார். ஆம், உவந்துதான்; பயந்து அல்ல! பாரதி எந்திர வளர்ச்சியை வரவேற்றார். எந்திரங்கள் நிறுவப்படுவதால், பூமாதேவி தூர்த்துத் துடைக்கப்பட்டுப் போவாள் என்றோ, அவளது பொலிவும் புன்னகையும் அழிந்து, அவள் கோர சொரூபமாகக் காட்சியளிப்பாள் என்றோ பாரதி கருதவில்லை. மாறாக, எந்திர வளர்ச்சியால் பூமண்டலத்தின் வாழ்வும் வளமும் பெருகி, புதிய பொலிவும் பூரிப்பும் திகழும் என்பதை அவர் உணர்ந்திருந்தார். இதனை எமிலி வெர்ஹாரன் (1855—1916) என்ற பெல்ஜியக் கவிஞரைப் பற்றி, தாம் எழுதப் புகுந்த ஒரு கட்டுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

"வலிமை ஓர் அழகு; அழகு ஒரு வலிமை. எந்திர ஆலை, நீராவி வண்டி, நீராவிக் கப்பல், வானத்தேர், பெரிய

பீரங்கி எல்லாம் அழகுதான். உயர்ந்த கவிகள் வலிமை யுடைய பொருள்களை அவ்வக் காலத்தில் வழங்கிய வரையிலே வர்ணனை செய்துதான் இருக்கிறார்கள். இதிலே புதுமை ஒன்றும் இல்லை...வலிமையே அழகு. ஒரு பொருளின் வெளியுருவத்தைப் பார்த்து அது அழகா, இல்லையா என்று தீர்மானம் செய்யலாகாது. எந்திரங்களிலே வலிமை நிகழ்கின்றது. ஆதலால்அவை அழகுடையன. அவற்றைக் கவி புகழ்ச்சி செய்தல் தகும்'' (உல்லாச யாத்திரை : பாரதி தமிழ்).

மேற்காட்டிய இரு கவிஞர்களின் கூற்றுக்களிலிருந்து, தாகூரிடமிருந்து பாரதி முற்றிலும் துலாம்பரமாக வேறு பட்டு நிற்கிறார் என்பதை நாம் காண்கிறோம். எந்திரங்களைக் கவிகள் புகழ்ச்சி செய்தல் வேண்டும் என்கிறார் பாரதி. தாகூரோ அவற்றைச் ''சாத்தானின் நாய்கள்'' என இகழ்ச்சி செய்கிறார். இந்த வேறுபாட்டுக்குக் காரணம் என்ன? இரு கவிஞர்களின் வாழ்க்கைச் சூழ்நிலையில் நிலவிய வேறுபாடுதான் இதற்குக் காரணம். எப்படி ?

உலகத்தில் ஏற்பட்டுவரும் மாறுதல்களைப் பற்றிய பிரக்ஞையே இல்லாத கிணற்றுத் தவளைச் சூழ்நிலையிலிருந்த ஒரு குட்டி ஜமீனான எட்டயபுரத்தில் பிறந்து வளர்ந்தவர் பாரதி; அவர் அந்த ஜமீன்தாருடன் சில காலம் தங்கி யிருந்தவர்; அவரிடம் சில காலம் பணியாற்றியவர். என்றாலும், அந்தக் ''கவுண்டனூர் சமஸ்தான'' வாழ்க்கை பாரதிக்கு அருவருப்பையே தந்தது. எட்டயபுர மன்னரின் கீழ் தாம் பணியாற்ற நேர்ந்த துர்ப்பாக்கிய நிலையை அவரே மனம் நொந்து பாடியிருக்கிறார். அந்த மன்னரிடம் தாம் பணி செய்ய நேர்ந்த பாவத்தால், கவிதைக் காதலியே தம்மைவிட்டு அகன்றதாக அவர் கூறியுள்ளார்.

**தென்திசைக் கண்ணொரு சிற்றூர்க் கிறைவனும்**
**திருந்திய ஒருவனைத் துணையெனப் புகுந்து, அவன்**
**பணிசெய இசைந்தேன், பதகி நீ! என்னைப்**
**பிரிந்து மற்றகன்றனை...**

**திமிங்கில உடலும் சிறிய புன்மதியும்**
**ஒரேழ் பெண்டிரும் உடையதோர் வேந்தன்**
**தன்பணிக் கிசைந்து, என் தருக்கெலாம் அழிந்து**
**வாழ்ந்தனன்....**

என்று தம்மைத் தாமே நொந்து பாடியுள்ளார் (கவிதைக் காதலி). நிலப்பிரபுத்துவத்தின் அகழிமுதலைச் சூழ்நிலை யிலே வாழ்ந்த பாரதி அதனை நஞ்செனவெறுத்தார். தமது வறுமையையும் எண்ணிப் பார்க்காமல் ஆரம்பத் திலேயே அந்தச் சூழ்நிலையிலிருந்து தம்மைத்தாமே அறுத்துக் கொண்டு வெளியேறி, தேசத்தின் புதிய எழுச்சியோடும் விழிப்போடும் தம்மை ஐக்கியப்படுத்தித் தம்மைத் தாமே வளர்த்துக் கொண்டவர் பாரதி. நிலப்பிரபுத்துவத் தளையை முறித்து, அசுர வேகத்தில் முன்னேறத் துடித்தவர் அவர். எனவே நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தின் பல்வேறு கொடுமைகளையும் அவர் கண்டித்தார். இந்திய நாட்டில் எந்திர வளர்ச்சி ஏற்பட வேண்டுமெனத் துடித்தார். ஆனால் தாகூரோ ஜமீன்தாரிக் குடும்பத்தில் ஒரு குட்டி ஜமீன்தாராகப் பிறந்து வளர்ந்தவர். பேராசிரியர் ஹுமாயூன் கபீர் சொல்வது போல், "அந்தக் காலத்திலிருந்த பிராமண ஜமீன்தார்களிலிருந்து அப்படி யொன்றும் மாறுபடாத" ஜமீன்தாராகத்தான் அவர் வாழ்ந்து வந்தார். ஜமீன்தாரி வாழ்க்கையான அந்த நிலப் பிரபுத்துவத் தளையிலும் ஓரளவு சுகம் கண்டு, அதிலிருந்து விடுபடத் தயங்கியவர் அவர். எந்திர வளர்ச்சியோ நிலப்பிரபுத்துவச் சமுதாயத்துக்கு எமன்; அதன் சாவு மணி. அது வளர வளர நிலப்பிரபுத்துவம் தனது பிடிப்பில் தளர்ந்து தளர்ந்து தானே மாண்டுபோகும். இது சரித்திரத்தின், பொருளாதாரத்தின் தவிர்க்க முடியாத நியதி. எனவே ஜப்பானின் எந்திர வளர்ச்சியைப் பார்க்கின்ற தாகூருக்குத் தம்மையறியாமலே உள்ளுணர்வு உறுத்துகின்றது. அதனைத் "தமது சரீரத்துக்கு நேரும் பயம் போல" அவர் காண்கின்றார்; கண்டு அஞ்சுகிறார்.

எந்திரங்களைப் பற்றிய அவரது கவிதையில் எந்திரமானது "பண்டைக் காலத்தின் நிலையான பொருள்களை யெல்லாம் உடைத்துத் தள்ளுகிறது" என்று அவர் கூறும்போது, நீண்ட நெடுங்காலமாக நிலையாக இருந்து வரும் நிலப் பிரபுத்துவச் சமுதாய அமைப்பை எந்திரங்கள் உடைத் தெறிவதைத்தான் அவரது உள்ளுணர்வு கண்டுணர்ந்து அச்சம் கொள்கிறது. மேலும் எந்திரங்களை மனித உணர்ச்சிகள் ஏற்க மறுக்கின்றன என்றும், அவற்றின் பாதையை மறிக்கின்றன என்றும் அவர் கூறுகிறார் அல்லவா ? ஆனால் உண்மையில் தாகூரின் உணர்ச்சிகள் தான் எந்திரங்களை ஏற்க மறுக்கின்றன; அதன் வருகையை மறிக்க எண்ணுகின்றன. நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தின் விளைவான கொடுமைகளையும், அதன் மிச்ச சொச்சங் களையும் எதிர்த்தவர்தான் தாகூர். எனினும் அந்தச் சமுதாயத்தின் ஆணிவேரையே பிடுங்கியெறியும் வலிமை வாய்ந்த எந்திர வளர்ச்சியைக் காணும் போதோ, அதனை முற்றிலும் நிராகரிக்கும் அளவுக்கு அவரிடம் நிலப்பிரபுத் துவப் பிடிப்பும், அதன்மீது அபிமானமும் இருந்தன என்பது தான் உண்மை எனத் தெரியவருகிறது. எனவே எந்திர வளர்ச்சியைப் புகழ்ச்சி செய்ய அவர் தவறுகிறார்; தயங்கு கிறார். இந்த உண்மையை நாம் கூச்சநாச்சமின்றி ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். பாரதிக்கும தாகூருககுமிடையே நிலவிய வேறு பல கருத்து மாறுபாடுகளும்கூட, இந்த வேற்று மையின் காரணமாகவே ஏற்பட்டன எனறு சொல்லலாம். தாகூரிடமிருந்த இந்தப் பிடிப்பின் தளையை அவரே உணர்ந்து, அதனைக் களைந்தெறிய முன்வருவதற்கு அவருக்கு வெகுகாலம் பிடித்தது. அவரது அந்திம காலத்தில்தான் அந்த மாறுதல் அவரிடம் ஏற்பட்டது. இந்த மாறுதல் பற்றிய உண்மையை அவரது வாய்மொழி மூலமாகவே நாம் பின்னர் காண்போம்.

7

## அரசியல், பொருளாதாரக் கருத்துக்கள்

இந்த அத்தியாயத்தில் நமது இரு கவிஞர்களின் அரசியல், பொருளாதாரக் கருத்துக்களையும் விரிவாக ஆராய் வதற்கு இடமில்லை. எனினும் இருவரது கண்ணோட்டங் களையும் புரிந்து கொள்ளக்கூடிய அளவுக்கு, இருவர் தம் வாழ்க்கையிலிருந்தும் வாசகங்களிலிருந்தும் நாம் சில உண்மை களைத் தெரிந்து கொள்ளவேண்டும். தாகூரின் வாழ்நாட் காலத்தில் அவரது கவனத்தைக் கவர்ந்த விஷயங்கள் ஏராளம்; அவைபற்றி அவர் தெரிவித்துள்ள கருத்துக்களும் ஏராளம்; ஏராளம். சொல்லப்போனால், தாகூர் பலவிதத் திலும் பிரமிக்கத்தக்க சிறந்த சிந்தனையாளராகத் திகழ்கிறார். எனினும் சில விஷயங்களில் பாரதிக்குள்ள தெளிவும், பிடிப்பும், தீர்க்க தரிசனமும் தாகூரிடம் இல்லாமற் போய் விட்டன என்றே சொல்லவேண்டும். அவற்றில் அரசியலும், பொருளாதாரமும் முக்கியமானவை.

பாரதி தேசிய இயக்கத்தில் ஈடுபட்டு அதில் தீவிரமாகப் பாடுபட ஆரம்பித்த காலத்தில், தாகூர் அரசியல் ஈடுபாட்

டிலிருந்து விலகி, "கவிதையும் பாட்டுமான தமது தந்தக் கோபுரத்துக்குள்" புகுந்து சாந்தி நிகேதனில் ஒதுங்கி யிருந்தார் என முன்னர் பார்த்தோம். வங்கப் பிரிவினையின் போது அரசியலில் தீவிரமாக ஈடுபட்டிருந்த தாகூர், அதில் எவ்வளவு தீவிரமாக ஈடுபட்டாரோ அவ்வளவு விரைவாக அதிலிருந்து விலகியும் சென்று விட்டார். வங்காளப் பிரிவினை யைத் தொடர்ந்த காலகட்டத்தில் தீவிரவாதிகளின் அரசியல் செல்வாக்குப் பெற்று மேலோங்கியிருந்தது. அதிகாரபூர்வ மான காங்கிரஸ் ஸ்தாபனம் அவர்களை அங்கீகரிக்க மறுத்த போதிலும், காங்கிரஸ் ஸ்தாபனத்திலிருந்து தீவிரவாதிகள் விலகி நின்ற போதிலும், மக்களிடையே தீவிரவாதிகளுக்கே மவுசும் செல்வாக்கும் இருந்தன. இந்தச் செல்வாக்கு மேலோங்கிய காலத்தில் அடக்கு முறையும் கொடியதாக இருந்தது. ராஜத்துவேஷ வழக்குகள் பல போடப்பட்டன. பல அரசியல் தலைவர்கள் சிறையில் தள்ளப்பட்டனர். மேலும் இந்தச் சந்தர்ப்பத்தை யொட்டி இந்திய நாட்டில் பயங்கர இயக்கமும் தலைதூக்கியது. ராஜத்துவேஷ வழக்கு களில் நீதிபதியாக இருந்து தீர்ப்பு வழங்கிய கிங்ஸ்போர்ட் என்ற ஆங்கிலேயரைக் கொல்ல நினைத்து, இரண்டு பலாத் காரவாதிகள் வீசிய வெடிகுண்டு தவறுதலின் காரணமாக இரண்டு ஆங்கிலேயப் பெண்மணிகளைக் கொன்று தள்ளியது. இதனைத் தொடர்ந்து வெடி குண்டு வீசும் பயங்கர இயக்கம் ஆங்காங்கே தலை காட்டியது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அரவிந்தர் இத்தகைய வழக்கொன்றில் சம்பந்தப்படுத்தப் பட்டு, பின்னர் 'தேசபந்து' சி. ஆர். தாஸின் திறமையான வாதத்தின் மூலம் விடுதலையானார். இதனால் வாலிபர் சங்கங் களுக்குத் தடையும், பத்திரிகைச் சுதந்திரப் பறிமுதலும், பயங்கரமான அடக்குமுறையும் ஆங்கிலேய அரசாங்கத்தால் கட்டவிழ்த்து விடப்பெற்றன. பயங்கர இயக்கம் போன்ற பலாத்காரப் போக்குகளையெல்லாம் காணச் சகிக்காத தாகூர் இந்தச் சந்தர்ப்பத்தில் அரசியலிலிருந்து விலகிக் கொண்டு விட்டார். அவ்வாறு விலகியதற்குப் பயங்கர இயக்

கத்தின் பிரவேசம் மட்டும் காரணமல்ல. அன்னியச் சாமான் களின் பகிஷ்காரம் போன்ற அம்சங்களைக் கொண்டு விளங்கிய, அன்றைத் தேதியில் முற்போக்கான அரசியல் இயக்கமாக விளங்கிய தீவிரவாதப் போக்கும் தாகூருக்குப் பிடிக்கவில்லை. சட்டசபை மோகம் கொண்ட காங்கிரசை முன்னர் பழித்துப் பேசிய தாகூர், சட்டசபை மோகத்தை உதறித் தள்ளிவிட்டுத் தீவிரவாதம் பேசிய தலைவர்களையும் ஆதரிக்க முன்வரவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தைப் பற்றி அவரே பின்னொரு முறை பின்வருமாறு எழுதினார்: ''நாட்டைப் பற்றி எதுவும் தெரியாத அறியாமையும், தாய் நாட்டுக்குச் செய்யும் உண்மையான சேவையின்பால் அதீத மான அலட்சியமும் கொண்ட, தேசிய உணர்வின் சக்தியை யெல்லாம் இழந்து விட்டதாகத் தோன்றிய, அந்தக் காலத்து அரசியல் இயக்கங்கள் ஊட்டிய மலிவான போதைக்கு என் மனம் இசைய மறுத்து விட்டது. எனக்குள்ளும் என்னைச் சுற்றி எங்கிலும் ஒரு மூர்க்கமான புழுக்கமும், சகிக்க வொண்ணாத அதிருப்தியும் என்னைச் சித்திரவதை செய்வதை உணர்ந்தேன்.'' இந்தக் கால கட்டத்தில் தாகூரின் மனநிலை எவ்வாறிருந்தது என்பதைப்பற்றி டாக்டர் வி.எஸ்.நாரவனே (நிரந்தரப் பிரயாணி: கட்டுரை) எழுதியுள்ள வரிகள் நமது கவனத்துக்குரியவை: ''எவ்வாறாயினும், பின்னர் தேசிய சுதந்திரம் பற்றிய தமது பார்வை அரசியல்வாதி களின் பார்வையிலிருந்து முற்றிலும் வேறுபட்டது என்பதை அவர் கண்டறிந்தார். நாடு அன்னியராட்சியில் உள்ள காரணத்தால், அறியாமை, சமூக அநீதி, மூடநம்பிக்கை ஆகிய வற்றை எதிர்த்துப் போரிடுவதை உதறித் தள்ளமுடியாது என அவர் நினைத்தார். அதி தீவிரவாத தேசியத்தின் ஆபத்தை அவர் உணர்ந்து கொண்டார். மேலும் அன்னி யத்துணி, அன்னியக் கலாசாரம் அல்லது அன்னிய ஸ்தாப னங்கள் எதுவாக இருந்த போதிலும் அவற்றை விலக்கி விடுவது அல்லது ஒதுக்கி விடுவது என்ற கருத்தின் அடிப் படையில் மட்டும் உண்மையான சுயராஜ்யத்தை நிறுவி விட

முடியாது என அவர் உணர்ந்தார். தன்னிரக்கத் துயரம், சமுதாய அரசியல் அமைதியின்மை ஆகியவற்றின் இந்தச் சேர்க்கை அவரது இந்தக் கால எழுத்துக்களில் பிரதிபலித்தது. அவர் ஒரு சிக்கலான மனோநிலையில்தான் இருந்தார்.''

ஆனால் இதே சூழ்நிலையில் நாம் பாரதியைப் பார்க்கின்ற போதோ, பாரதி நமக்கு மாறுபட்ட தோற்றத்தில்தான் காட்சியளிக்கிறார்.

''சிவாஜியின் வாசகங்கள்'' என்ற தலைப்பில் பால கங்காதர திலகர் தமது ''கேசரி''ப் பத்திரிகையில் எழுதிய கட்டுரை ராஜத்துவேஷமானது என்று குற்றம் சாட்டப் பட்டு, திலகருக்குச் சிறைத் தண்டனை வழங்கப்பட்டது என்பதை நாம் அறிவோம். திலகர் போன்றவர்கள் இவ்வாறு சிறைப்படுத்தப்பட்ட போதிலும்கூட, தீவிரவாத தேசியம் மேலோங்கி நின்ற காலத்தில், பாரதி தமது ''இந்தியா''ப் பத்திரிகையில் ''சிவாஜி தம் சைனியத்துக்குக் கூறியது'' என்ற தலைப்பில் சிவாஜியின் வீராவேச மொழிகளைக் கவிதை யாக வெளியிட்டார். அஞ்சா நெஞ்சத்தோடு வெளியிட்ட அந்தக் கவிதையில்,

**தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை**
**மாய்த்திட விரும்பான் வாழ்வும்ஓர் வாழ்வுகொல்?...**
**பாவியர் குருதியைப் பருகுவார் இருமின்!...**
**செற்றினி மிலேச்சரைத் தீர்த்திட வம்மின்!**
**ஈட்டியால் சிரங்களை வீட்டிட எழுமின்!**
**நீட்டிய வேல்களை நேரிருந் தெறிமின்!...**
**நெஞ்சக் குருதியை நிலத்திடை வடித்து**
**வஞ்சக மழிக்கும் மாமகம் புரிவம்யாம்...**

என்றெல்லாம் பாடுகின்ற வரிகள் சிவாஜியின் கூற்றாகக் கூறப் பட்டாலும், இவை அன்று நிலவிய சூழ்நிலையில் ஆங்கிலே யருக்கெதிரான பலாத்கார வாசகங்களாகவே கொள்ளப் பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. பாரதி இவ்வளவு ஆக்ரோஷமான, ஆத்திரமூட்டக்கூடிய கவிதைகளைப் பாடி

யிருந்தாலும், அன்று இந்திய நாட்டில் தலை தூக்கிய பயங்கர இயக்கம் பற்றி அன்றைய நிலையில் அவர் எத்தகைய கருத்துக் கொண்டிருந்தார் என்பதை அறிய நமக்குத் தேவையான சான்றுகள் இன்னும் போதிய அளவுக்குக் கிட்டவில்லை என்றாலும் அவர் தமது இறுதிக் காலத்தில் "சென்னை ராஜதானியில் அரசியல் வளர்ச்சி" என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் எழுத முனைந்து அரைகுறையாக விட்டுப்போன ஒரு நூலில் இந்தியாவில் வெள்ளைக்காரப் பெண் மீது வெடிகுண்டு வீசிக் கொன்ற செயலைப் பற்றிப் பின்வருமாறு மனம் நொந்து எழுதியுள்ளார்: 'என்ன காரியம் செய்தனர்! நவஇந்தியாவில் உதயமாகியுள்ள ரஜபுத்திர வீரத்துக்கு என்ன இழுக்கு? என்ன தவறு! என்ன தவறு!...உன்னதமான வாழ்க்கையிலே ஊறித் திளைத்த இந்திய நாடும் உடனே 'கவனியுங்கள்! ஆரம்பமே அபசகுனமாயிருக்கிறது! எனது நாட்டில் இவ்வியக்கம் வேரூன்றாது' என்று எச்சரித்தது." இவ்வாறு எழுதிவிட்டு, பின்னர் அவர் தமது சொந்த ஜில்லாவான திருநெல்வேலியில் கலெக்டர் ஆஷ் துரையை வாஞ்சி ஐயன் மணியாச்சி ஸ்டேஷனில் சுட்டுக் கொன்றது பற்றியும் எழுதி, இறுதியில், "இதற்குப் பின் இம்மாதிரி இன்னொரு சம்பவம் நடைபெறவில்லை என்ற விஷயம் சென்னை ராஜதானிக்கே பெருமையளிக்கிறது. சென்னை ராஜதானியில் பயங்கர இயக்கம் பிறக்கும் போதே உயிரற்ற பிண்டமாகப் பிறந்தது" எனக் குறிப்பிட்டுள்ளார். (பாரதி புதையல்-2). இதற்கும் முன்பாகவே 1909-ம் ஆண்டிலேயே லண்டன் நகரத்தில் மதன்லால் திங்கரா என்ற இந்திய இளைஞன், கர்ஸான் வைலி என்ற, முன்னாளில் இந்தியாவிலிருந்த அதிகாரியைச் சுட்டுக் கொன்று, அதன் காரணமாகத் தூக்குத் தண்டனை விதிக்கப் பெற்ற செய்தியைக் கேட்டு, நமது நாட்டிலுள்ள சிலர் திங்கராவின் செயலை வரவேற்றதைக் கண்டு, "அற்பத்துக் கெல்லாம் சந்தோஷித்துப் பழிவாங்கும் இழிவான குணம் ஆரியர்களுடையதல்ல. நமது நாட்டில் ஒருநாளும் கேட்டிருக்க முடியாத வெடிகுண்டு முதலிய பயங்கரமான

செயல்கள் அநாகரிகமானவைகள்" என்றும் பாரதி எழுதியுள்ளார் (பாரதி புதையல்-2). எனவே தாகூரைப் போலவே, பாரதியும் பயங்கர இயக்கத்தை ஒப்புக் கொள்ளவில்லை, வரவேற்கவில்லை என்றும் நாம் சொல்லலாம். என்றாலும் பாரதி அரசியலிலிருந்து ஒதுங்கிக் கொண்டு விடவில்லை. திலகர், லஜபதிராய், அரவிந்தர், சிதம்பரம் பிள்ளை முதலிய அருந்தலைவர்களின் தலைமையில் வளர்ந்த தீவிரவாத தேசியத்தின் முற்போக்குத் தன்மையையுணர்ந்து, அரசியலிலே தாமும் ஈடுபட்டு, இறுதி வரையில் எண்ணற்ற கஷ்டங்களை அவர் அனுபவித்தார் என்பதை நாமறிவோம். தீவிரவாத தேசியம் "அறியாமை, சமூக அநீதி, மூடநம்பிக்கை ஆகியவற்றை" எதிர்த்துப் போராடவில்லை எனத் தாகூர் கருதியதாக முன்னர் பார்த்தோம். இந்தக் கருத்தில் உண்மையும் உண்டு. இந்தக் கால கட்டத்தின் தேசியத்தைப் பற்றிக் கூறும்போது பண்டித ஜவாஹர்லால் நேரு பின் வருமாறு குறிப்பிடுகிறார்: "சமூக நோக்கோடு பார்த்தால், 1907-ம் ஆண்டில் மலர்ந்த இந்திய தேசியம் பிற்போக்கானதே." (சுய சரிதம்). இவ்வாறு கூறக் காரணம் என்ன? சுதந்திரத்துக்காகத் தீவிரமாகப் போராட வேண்டும் என்று கச்சை கட்டி நின்ற திலகர், அரவிந்தர் முதலியோர் சமூகச் சீர்திருத்தங்களுக்காகப் போராட முனையவில்லை; போராட விரும்பவில்லை. சுதந்திரம் கிட்டிவிட்டால் எல்லாச் சீர்திருத்தங்களையும் நாமே செய்து கொள்ளலாம் என்பது அவர்கள் கருத்து. இதனால்தான் ஆங்கிலேய ஆட்சி "திருமண வயது மசோதா" (Age of Consent Bill) ஒன்றைக் கொண்டு வந்தபோது, அதனைத் திலகர் எதிர்த்தார். பாலிய விவாகத்தைத் தடை செய்யும் இந்த மசோதா முற்போக்கானது என்றாலும், அதனை வெள்ளைக்காரன் கொண்டு வந்த ஒரே காரணத்தால் அவர் அதனை எதிர்த்தார். பாரதி இந்தக் கால கட்டத்தின் தீவிரவாதம் தோற்றுவித்த அரசியலில் முற்போக்கைக் கண்டார்; அதே சமயம் அது சமூக அநீதிகளையும், மூட நம்பிக்கைகளையும் எதிர்த்துப் போராட முனையாத பிற்போக்குத் தன்மையையும் உணர்ந்தார். எனவேதான்

தீவிரவாத தேசியத்தோடு கலந்து நின்ற பாரதி, அதே சமயத்தில் ஜாதிக் கொடுமைகள், சமூக அநீதிகள் ஆகிய வற்றையும் கண்டித்தே தமது பாடல்களை இயற்றினர். இதற்கு அவரது தேசியப் பாடல்கள் அனைத்துமே அருமை யான சான்றாகும். ஆனல், தாகூரோ இந்தக் காலத்துத் தேசியத்தின் பிற்போக்குத் தன்மையை மட்டுமே கண்டார்; அதன் முற்போக்குத் தன்மையை உணரவும் ஏற்கவும் மறுத்து, தேசிய இயக்கத்திலிருந்து விலகிக் கொண்டார். காரணம் அவர் கவியாக இருந்து தேசிய இயக்கத்தில் பங்கெடுத்தவர். பாரதியோ தேசிய இயக்கத்தாலேயே சிறந்த கவிஞராகப் பரிணமித்தவர்.

தீவிரவாத தேசியம் பற்றி பண்டித நேரு "அது சமயத் தேசியம் என்பதில் ஐயமில்லை" என்றும் குறிப்பிட்டுள்ளார் (சுய சரிதை). இந்தக் கூற்றும் உண்மைதான். தீவிரவாத தேசியத் தலைவர்கள் பொதுவாக இந்து மத நாகரிகத்தையும், இந்து சாம்ராஜ்யப் பெருமையையும் நிலை நாட்டுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார்கள். தயானந்த சரஸ்வதி தோற்றுவித்த ஆரிய சமாஜக் கொள்கைகளில் பெரிதும் ஈடுபாடு கொண்ட தீவிரவாதத் தலைவர் லஜபதிராய்; திலகர் சிவாஜி மன்னரின் பெருமைகளைக் கூறி இந்து சாம்ராஜ்யக் கனவை வளர்த்தார்; அரவிந்தர், விபினசந்திரபாலர் முதலாயின வங்கத் தலைவர்களோ காளி மாதாவையும் பாரத தேவியையும் ஒன்ருகவே சித்திரித்தார்கள். தேசிய இயக்கத் தில் இத்தகைய மதச்சார்பான போக்கு தென்படுவதைத் தாகூர் கண்டார்; அதனைச் சுட்டிக்காட்டி, அவர் அந்தத் தலைவர்களை எச்சரித்தார். மக்கள் மத்தியிலே தேச பக்தியையும் வீரவுணர்ச்சியையும் உருவேற்றுவதற்காக, தீவிரவாத தேசியத் தலைவர்கள் "சிவாஜி திருநாள்" முதலியவற்றைக் கொண்டாடும்படி அறைகூவல் விடுத்தார் கள்; பவானி பூஜை நடத்துமாறு கோரினர்கள். சிவாஜி திருநாள் கொண்டாடுவதைத் தாகூர் வரவேற்ருர். அதனைக் கொண்டாடுவதன் மூலம் இந்திய நாட்டின் விழிப்புற்ற

மக்களை ஒன்று திரட்ட ஏதுவாகும் என்று அவர் கருதினார். அதே சமயம் அந்த விழாவைக் கொண்டாடும் உற்சாகத்தில் அந்த விழாவின் ஒரு பகுதியாகப் பவானி தெய்வத்தைப் பூஜிப்பதைப் பொதுஜன வணக்கமாகக் கொண்டு வருவது, நிச்சயம் இந்துக்களல்லாதவர்களைத் தனிமைப்படுத்தும் என்று சுட்டிக்காட்டினார் (வங்காள மறுமலர்ச்சி பற்றிய குறிப்புக்கள்—அமித் சென்). ஆம். அரசியலில் மதத்தைப் புகுத்துவது பற்றித் தாகூர் அன்றே எச்சரித்தார். "நமக்கு நமது மதமும் வேண்டும்; நமது தேசியமும் வேண்டும். நமது பகவத்கீதையும் வேண்டும்; நமது வந்தேமாதர கீதமும் வேண்டும். இதன் விளைவாக இரண்டுமே பாதிக்கப்படுகின்றன. இந்தச் செய்கை நமது இந்திய நாட்டு விழாக்கால வாத்தியங்களுக்கு அருகருகில் ஆங்கிலேயரின் மிலிட்டெரி பாண்டு வாத்தியத்தையும் சேர்த்து வாசிப்பது போலிருக்கிறது. இத்தகைய பயங்கரமான குழப்பத்துக்கு ஒரு முடிவு கட்டுவதை எனது வாழ்வின் லட்சியமாக நான் கொள்ள வேண்டும்" என்று தாகூர் அன்று எழுதினார். அதன்படியே அவர் தாம் பழைய வேதாந்த தர்மத்தை அனுசரிப்பவராக இருந்தபோதிலும், எந்தவொரு குறிப்பிட்ட இந்து தெய்வத்தைப்பற்றியும் பாடவில்லை என்றே சொல்லலாம். அவரைப் பொறுத்த வரையில் அரசியலையும் மதத்தையும் வேறுபடுத்தியே பார்த்தார். ஆனால் தாகூர் விடுத்த இந்த எச்சரிக்கை நமது தேசியத் தலைவர்களுக்குப் புலப்படவில்லை. பாரத தேவியையே அவர்கள் ஒரு இந்து தெய்வம்போலத்தான் பார்த்தார்கள்; பவானியின் அவதாரமாகவும், காளியின் மூர்த்தமாகவும்தான் கண்டார்கள். இந்தப் போக்கு பல்வேறு ரூபத்தில் நீடித்து வளர்ந்ததுதான், இந்திய நாட்டில் முஸ்லீம் லீக் தோன்றவும், வெள்ளையர்கள் அதனைப் பயன்படுத்தி இந்திய நாட்டிலிருந்து முஸ்லீம் மக்கள் வாழும் பகுதியைத் துண்டாடவும் நேர்ந்தது என்பது நாம் மறுக்கவோ, மறைக்கவோ, மறக்கவோ முடியாத கசப்பான உண்மையாகும்.

ஆனால் தாகூரைப் போன்றில்லாமல், பாரதி இவ் விஷயத்தில் தம்மையறியாமலே தேசியத் தலைவர்களின் மதச்சார்பான போக்குக்கு உடந்தையாக இருந்தார் என்றே சொல்லவேண்டும். பாரதியும் சிவாஜி போன்றவர்களின் உற்சவத்தை நடத்துவதை வரவேற்றார்; சிவாஜி பற்றிப் பாடல் எழுதினார்; "சிவாஜி உற்சவம் கொண்டாடுவோம்" என்று 1906ம் ஆண்டில் "இந்தியா"ப் பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதினார். எனினும் தாகூரைப்போலவே அன்றைய அரசியலில் நிலவிய மதச்சார்பை யுணர்ந்து அந்தக் கட்டுரையில் பாரதி பின்வருமாறு எழுதினார்: "இந்த (சிவாஜி) உற்சவம் நடத்தியதில் சில மகம்மதியருக்கு வெறுப் புண்டாகி, அதைச் சில பத்திரிகைகளிலும் வெளியிட்டிருக் கிறார்கள்...நமது நாட்டில் தோன்றி நமது நன்மைக்குப் பாடுபட்ட மகான்களை எல்லோரும் ஒன்றுசேர்ந்து பூஜிப் பதே கடமை. இதை நாமெல்லோரும் நமது மகம்மதிய சகோதரர்களுக்குக் காரியத்தில் காட்ட, அக்பர் போன்ற மகம்மதிய மகான்களின் உற்சவத்தையும் கொண்டாட வேண்டும். அதனாலதான அவர்களுக்கு முழுநம்பிக்கை உண்டாகும். ஆகையால் நமது நாட்டார் அனைவரும் இதை ஆழ்ந்து யோசித்து நமது அக்பர் சக்கரவர்த்தியின் உற்சவத் தையும் கொண்டாடுவரென நாம் எதிர்பார்க்கிறோம்." (பாரதி புதையல்-2). ஆனால் பாரதியின் இந்த யோசனை என்றும் ஏற்கப்பட்டதாகவோ, நிறைவேற்றப்பட்டதாகவோ நமக்குத் தெரியவில்லை. பாரதி மதத்தில் நம்பிக்கையுள்ளவர்; எனினும் மதவெறியரல்ல. இந்து சமயக் கடவுள்கள் பலரையும் பாடிய அதே வாயால், அல்லாவையும், ஏசு கிறிஸ்துவையும், புத்தரையும் பாடியவர்; இஸ்லாம் மதத்தின் மேன்மைபற்றிப் பிரசங்கம் செய்தவர்; சர்வ சமய சமரசம் கண்டவர். பாரதநாட்டைப்பற்றி எழுதும்போது, "கிறிஸ்த வர்களாயினும், பார்ஸிகளாயினும், மகம்மதியராயினும், எங்கிருந்து வந்து எந்த இஷ்ட தெய்வத்தைக் கொண்டாடிய போதிலும், இதையே (பாரத நாட்டையே) சரணாகக்

கொண்ட மனிதர்களையெல்லாம் பாரத ஜாதியிலே சேர்த்துக் கணக்கிட வேண்டும். இது ஒரே ஜாதி; பிரிக்க முடியாதது; அழிவில்லாதது'' என்று எழுதியவர் (கட்டுரைகள்: சமூகம்). எனினும் பாரதி சிருஷ்டித்த பாரத தேவியின் மூர்த்தம், பராசக்தித் தெய்வத்தின்மீது அவர் கொண்டிருந்த ஈடுபாட்டின் விளைவாய் வடித்தெடுக்கப்பட்ட ஓர்இந்து நாகரிகத்தின், இந்து தெய்வத்தின் மூர்த்தமாக அமைந்துவிட்டது என்றே சொல்ல வேண்டும். ஆம். எதிர்காலத்தில் பேராபத்து விளைவிக்கக்கூடிய மதச்சார்பான அரசியலைக் கைக்கொண்ட தலைவர்களின் தலைமையில்பெருக்கெடுத்த தீவிரவாத தேசியப் பிரவாகத்தில் பங்கெடுத்து, அதன் இழுப்புக்கெல்லாம் இணைந்து சென்ற பாரதி இந்த ஆபத்தைத் தாகூரைப்போல் பேரளவுக்கு உணரவில்லை என்றே சொல்லலாம். என்ற போதிலும் பாரதியின் படைப்புக்களின் முழுமையான தன்மையோ தாகூரையும் மிஞ்சிய மனிதாபிமானத்தையே பிரதிபலித்துள்ளது. இந்தப் பெருமையையும் உண்மையையும் நாம் மறந்துவிடுவதற்கில்லை.

தாகூர் அரசியலில் நேரடியாகப் பங்கு பெருமல் ஒதுங்கிக் கொண்டதற்கு அவரது அபிப்பிராய வித்தியாசங்கள் மட்டும் காரணமெனச் சொல்லமுடியாது. அவரிடம் மேலோங்கி நின்ற தனிமனித மனப்பான்மையும் (Individualism) ஒரு காரணம் என்றே சொல்ல வேண்டும். அவர் மனிதனை நேசித்தார்; ஆனல் மனிதக் கூட்டத்தைப் பற்றியோ வேறுபட்ட கருத்துக் கொண்டிருந்தார். இதனைக் ''கூட்ட மனேபாவம்'' பற்றி அவர் கூறியுள்ள பின்வரும் வரிகளில் நாம் காணலாம்:

''கூட்ட மனேபாவம் என்பது ஒரு குருட்டுச் சக்தி. நீராவியையும் ஏனைய பௌதிக சக்திகளையும் போன்று, அதனையும் ஒரு பிரம்மாண்டமான சக்தியை உண்டாக்கப் பயன்படுத்திக் கொள்ள முடியும். எனவே மனிதர்களை ஆள்பவர்கள் பேராசையாலும், பயத்தாலும் தமது ஜனங்களைச் சக்தி தரும் எந்திரங்களாக மாற்றுவதில் முனைகிறார்கள்.

தமது பிரத்தியேகமான காரியங்களுக்கு இந்தக் கூட்ட மனோ பாவத்தைப் பழக்கிவிட முயல்கிறார்கள். பொது ஜனத்தின் மனத்தில் சர்வ வியாபகமான பீதியையும், தமது இனத்தைப் பற்றிய அறிவுக்குப் பொருந்தாத கர்வத்தையும், பிறரின்மீது பகைமையையும் வளர்ப்பதைத் தமது கடமையெனக் கொள் கிறார்கள்...தனி மனிதன் தான் உணரும்போதுகூடச் சிந்திக் கிறான். ஆனால் மனிதன் கூட்டத்தோடு தன்னையும் சேர்த்து உணரும்போது, அவன் சிந்தித்தே பார்ப்பதில்லை. அவனது ஒழுக்க உணர்ச்சி மழுங்கப் போய்விடுகிறது. உயர்ந்த மனிதத்துவத்தைக் கூட்ட மனோபாவத்தில் ஒடுக்கிவிடும் இந்தச் செய்கை பிரம்மாண்டமான பலத்தை உற்பத்தி செய் வதாகும். ஏனெனில் கூட்ட மனோபாவம் என்பது சாராம் சத்தில் ஆதிப் பழமையானது; அதன் சக்திகளும் பூதத் தன்மையானவை. எனவே இந்த இருளின் பேராற்றலைத் தனக்குச் சாதகமாக்கிக் கொள்ள, தேசம் எப்போதும் கவனித்துக் கொண்டிருக்கிறது.''

ஆனால் கூட்டத்தைப் பற்றிப் பாரதி கொண்டிருந்த அபிப்பிராயமோ தாகூரின் கருத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும். எடுத்த எடுப்பிலேயே, ''ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே!'' என்று மனிதரின் ஒன்றுபட்ட சக்தியைக் குறித்துக் கோஷம் எழுப்பியவர் அவர். ''வாசக ஞானம்'' (கட்டுரைகள்: தத்துவம்) என்ற கட்டுரையில் பாரதி பின் வருமாறு எழுதுகிறார்: ''வாருங்கள், மக்களே! வாருங்கள்! அண்ணன் தம்பிமார்களே! ஒருவரிருவர் நேர்மை வழியில் செல்ல முயல்வதில் பல இடர்கள் ஏற்படுகின்றன. அதனால் நேர்மை வழியில் செல்ல விரும்புவோர்க்கெல்லாம் அதைரியம் ஏற்படுகிறது. வாருங்கள் உலகத்தீரே! கூட்டம் கூட்டமாக நேர்மை வழியில் புகுவோம்.'' இதே போன்று, ''மதிப்பு'' (கட்டுரைகள்: சமூகம்) என்ற கட்டுரையில் பாரதி பின்வரு மாறு கூறுகிறார்: ''கூட்டத்திற்கு வலிமையுண்டு...ஒரு பெரிய கூட்டத்தில் சேர்ந்திருக்கும் ஒவ்வொரு மனிதனும், புதிய

வலிமையும், அதனால் புதிய அனுகூலங்களும் பெறு கின்றன் பிச்சைக்காரர்கூட்டத் தனித்தனியே பிச்சை யெடுப்பதைக் காட்டிலும், நூறு பேர் கூட்டம் கூடிப் பிச்சைக்குப் போனால், அதற்கு மதிப்பு மிகுதியுண்டு... இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய தேசங்களில் கோடானுகோடியாக மனிதரைத் திரட்டிச் சண்டைக்கு உபயோகப்படுத்துகிறார்கள். ஒரு தேசம் முழுவதுமே ஒரு ஸைன்யம்போல் ஆகும்படி செய்ய வேண்டும் என்று அங்குள்ள சில தலைவர்கள் நினைக்கிறார்கள். நான் சண்டைக் காரனில்லை; சமாதானக்காரன். இருபது கோடி ஹிந்துக் களையும் ஒரே கூட்டமாகச் செய்து, சண்டைக்கன்று, சமா தானமாக, மனிதன் ஸாதனை செய்யக்கூடிய நல்ல பயன்களை நிறைவேற்றும் பொருட்டாக, உபயோகப்படுத்த வேண்டும் என்பது என்னுடைய நோக்கம்.''

இரு கவிஞர்களின் மேற்கண்ட கூற்றுக்களை ஆராய்ந் தால், சில உண்மைகள் புலப்படும். கூட்டத்துக்கு வலிமை யுண்டு என்ற உண்மையில் இருவருக்கும் கருத்து வேற்றுமை இல்லை; இருக்கவும் முடியாது. அந்த வலிமையின் தன்மை யைப் பற்றித்தான் கருத்து வேறுபாடு. தாகூருக்கோ கூட்டத்தின் வலிமை "குருட்டுச் சக்தி''யாகவும், "இருளின் பேராற்ற''லாகவும், ஆதிப் பழம் மனிதனின் மந்தைப் புத்தி யாகவும், சிந்தனைக்கிடமற்ற "பூதத் தன்மை''யானதாகவும் தோன்றுகிறது. எனவே அந்தச் சக்தியை மனிதர்கள் எந்திர மாக மாற்றுவதாகக் கூறுகிறார். அதே சமயம் தனிமனிதன் கூட்டத்தோடு சேரும்போது சிந்தனையையே இழந்து விடுவதாகவும், கூட்டத்தின் பலத்தில் அவனது உயர்வான தனி மனிதத்துவம் ஒடுங்கிப்போய் விடுவதாகவும் அவர் கருதுகிறார். ஆனால் பாரதியோ கூட்டத்தின் வலிமையை யுத்தம் முதலிய தீய காரியங்களுக்குப் பயன்படுத்தும் செயலைக் கண்டிப்பதோடு, அதனைச் சமுதாயத்தின் முன்னேற் றத்துக்குதவும் ஆக்க சக்தியாகவும் திருப்பிவிட முடியும் என்று கருதுகிறார். அவர் அதனைக் குருட்டுச் சக்தி

யாகவோ, இருட்டுச் சக்தியாகவோ கருதவில்லை. மேலும், தனி மனிதனாக நின்று போராடுவதில் இடர்களும், அதைரியமும் ஏற்படுகின்றன என்றும், எனவே கூட்டமாகச் சேர்வதே நல்லதென்றும் கருதுகிறார். இத்தனைக்கும் மேலாக, கூட்டத்தில் கலப்பதன் மூலம் மனிதன் தன் சிந்தனையை இழப்பதாகவோ அவனது தனித் தன்மை ஒடுங்கிப் போவதாகவோ பாரதி கருதவில்லை. மாறாகத் தனி மனிதன் அதன்மூலம் புதிய வலிமையும், புதிய அனுகூலங்களும் பெறுவதாகக் கூறுகிறார். தாகூர் தேசா தேசங்களுக்கும் அப்பாற்பட்ட "உலக மனித"னைப் போற்றிய போதிலும்கூட, மனிதக் கூட்டத்தைக் கண்டு கூசுமளவுக்கு, அவரிடம் தனி மனிதத்துவம் மேலோங்கி நின்றது. சமுதாயம் வழங்கும் சிந்தனையைவிட, தனி மனிதனின் சிந்தனை உயர்வானது எனத் தாகூர் கருதினார். ஆனால் சரித்திர நாயகன் சரித்திரத்தைச் சிருஷ்டிக்கவில்லை, சரித்திரம்தான் சரித்திர நாயகனை உருவாக்குகிறது என்ற உண்மையை அவர் உணரவில்லை; ஒப்புக்கொள்ளவும் இல்லை. எனவேதான் தேசிய இயக்கத்தில் கூட்டம் பெருகி, அது ஜன இயக்கமாக விரிவடையும் சூழ்நிலை உருவாகிவந்த பருவத்தில், அவர் தமது தனி மனிதத்துவத்தின் காரணமாக, அதிலிருந்து ஒதுங்கிக் கொண்டுவிட்டார் என்றும் சொல்லலாம். ஆனால் பாரதி வெறும் மனிதாபிமானத்தால் மட்டும் தம்மைப் பிற மனிதர்களோடு இணைத்துப் பார்க்கவில்லை. அவர் தனி மனிதனாக வாழாமல் தம்மைச் சமுதாயத்தோடு இணைத்தே பார்த்தார். அதன் மூலம் கூட்டத்தின் வலிமையையும், அனுகூலத்தையும் சுவீகரித்து, அவற்றைத் தமதாக்கி, அதன் மூலம் தம் பலத்தையும் சிந்தனையையும் அதிகரித்துக் கொண்டார். எனவேதான் அரசியல் துறையில் பாரதிக்கு அபிப்பிராய வித்தியாசங்கள் இருந்த போதிலும் அரசியல் ஈடுபாட்டால் தமக்குப் பல்வேறு கஷ்ட நஷ்டங்களும் ஏற்பட்ட போதிலும்கூட, பாரதி அதிலிருந்து துறவறம் வாங்கிக் கொள்ளவில்லை. ஆம், பாரதி ஒரு

சமுதாய மனிதராகத்தான் வாழ்ந்தார். அதன் காரணமாக, தனி மனிதத்துவப் பிடிப்புடன் வாழ்ந்த தாகூரையும்விட, சில அரசியல், சமூக, பொருளாதாரப் பிரச்சினைகளில் தெளிவும், தீர்க்கதரிசனமும், திட்டவட்டமும் மிகுந்த கருத்துக்களைப் பாரதி பெறவும், அவற்றை நமக்குத் தரவும் முடிந்தது எனலாம்.

இதனை இவ்விரு கவிஞர்களும் நமது தேசத் தந்தையான மகாத்மா காந்தியைப் பற்றித் தெரிவித்துள்ள சில கருத்துக்களிலிருந்தும் புரிந்து கொள்ளலாம்.

பாரதி காந்தியடிகளை வெகு காலத்துக்கு முன்பே புரிந்து கொண்டு விட்டார். தாகூர் அரசியலிலிருந்து விலகிக் கொண்ட அதே காலத்தை யொட்டி, 1909ம் ஆண்டிலேயே பாரதி காந்தியடிகளைப் பற்றி ஒரு கட்டுரை எழுதினார். காந்தியடிகளின் பெயர் நமது நாட்டில் அவ்வளவாகப் பரவாத அந்தக் காலத்தில், "ஸ்ரீயுத மோகன்லால் காந்தாதாஸ் காந்திஸிங்" என்ற தவறான பெயரில் அவர் ஒரு குறிப்பை எழுதியுள்ளார். அதிலுள்ள சில வரிகள் வருமாறு: "ஸ்ரீயுத காந்தி சிங்கானவர் ஏதோ சில காங்கிரசுக்கு வந்திருக்கிறார். இவர் இந்தியாவில் பிறந்தவர்தான். ஆனால் இவர் இந்தியாவில் வசிக்கிறதேயில்லை. ஆன போதிலும் இந்தியா தேச ஜனங்களிடத்தில் இவரைக் காட்டிலும் மேலான மரியாதை பெற இன்னும் யார் சரியானவர்கள்?...ராஜ்ய தந்திர முறைமையிலும், நல்ல ஸூக்ஷ்மமான புத்தியுடன் யோசித்துப் பார்த்தால், இவ்வருஷம் லாகூரில் நடைபெறப் போவதாய்ச் சொல்லும் காங்கிரஸுக்கு ஸ்ரீயுத காந்தியை அக்கிராஸனாதிபதியாகத் தேர்ந்தெடுப்பது ரொம்பவும் உயர்ந்ததும், முக்கிய விஷயமுமாகும்..." இவ்வாறு எழுதிய பாரதி அடுத்து அதே ஆண்டில் தமது 'இந்தியா"ப் பத்திரிகையில் எழுதிய மற்றொரு குறிப்பில் காந்தியடிகளின் தென்னாப்பிரிக்கப் போராட்டம் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, "ஸ்ரீ காந்தியின் நெறியையும் திடசித்தத்தையும் பார்த்தால், இப்படிப்பட்ட

தெய்வீக குணங்களமைந்த புருஷனும் உலகத்தில் இருக்கிறானென்று யோசிக்க வேண்டியதாயிருக்கிறது.... இவருடைய எதிரிகளான புலிகளுக்குத் தர்ம வாசனை சிறிதேனும் கிடையாது. அவர்கள் ஸ்ரீ காந்தியை விட்டு விடுவார்களா? ஒரு நாளுமில்லை ஆனால் கடைசியாக ஜயம் ஸ்ரீ காந்தி பக்ஷம்தான்'' என்றும் எழுதியுள்ளார் (பாரதி புதையல்-2).

தென்னாட்பிரிக்க இந்தியர் போராட்டம் முதலியவற்றை முடித்துக் கொண்டு, புகழ் வாய்ந்த, புடம்போட்ட அறப் போர் வீரராக, காந்தியடிகள் 1915ம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். அதே ஆண்டில் அவர் தாகூரின் சாந்தி நிகேதனுக்கும் விஜயம் செய்தார். காந்தியடிகளின் தென்னாப்பிரிக்கத் தியாக வாழ்வைப் பற்றி அறிந்திருந்த தாகூர் அந்தச் சமயத்தில்தான் அவரை ''மகாத்மா'' என்று குறிப்பிட்டார். தாகூர் இட்டழைத்த இந்தப் பெயரே பின்னர் காந்தியடிகளைக் குறிப்பிடும் காரணப் பெயராக நிலைத்துவிட்டது. காந்தியடிகளை 'மகாத்மா' என்று குறிப்பிட்டுத் தாகூர் கூறிய சொல் தமிழகத்துக் கவிஞரான பாரதிக்கும் இனிமையாக இருந்தது. எனவே பாரதி தாம் பாடிய ''பாரத மாதா நவரத்தின மாலை''யில்,

> **இன்ப வளம்செறி பண்பல இயற்றும்**
> **கவீந்திர னாகிய ரவீந்திர நாதன்**
> **சொற்றது கேளீர்! ''புவிமிசை இன்று**
> **மனிதர்க் கெல்லாம் தலைப்படு மனிதன்**
> **தர்மமே உருவாம் மோஹன தாஸ**
> **கர்ம சந்திர காந்தி'' என்றுரைத்தான்!**

என்று அதனை விதந்தோதி வரவேற்றுப் பாடினார். காந்தியடிகளும் தாகூரும் ஒருவர் மீதொருவர் மிகுந்த மதிப்பும் ஈடுபாடும் கொண்டவர்கள் என்பது பிரசித்தம். எனினும், காந்தியடிகளின் அரசியல் நோக்கையும் போக்கையும் பாரதி

தீர்க்க தரிசனத்தோடு உணர்ந்து கொண்ட அளவுக்கு, அதே காலத்தில் தாகூர் உணர்ந்து கொள்ளவில்லை என்றே சொல்ல வேண்டும்.

தென்னப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்த காந்தியடிகள் நான்கே ஆண்டுகளில் இந்திய தேசிய இயக்கத்தை வெகுஜன இயக்கமாக மாற்றி, அதனை வழி நடத்தும் சாரதியாக மாறிவிட்டார். 1919-ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் ரௌலட் சட்டம் அமலுக்கு வந்தது. அதனை எதிர்த்து, காந்தியடிகள், சத்தியாக்கிரகத்தைத் தொடங்கத் திட்டமிட்டார். அதே ஆண்டில் ஏப்ரல் 19-ம் தேதியன்று ரௌலட் சட்டத்தை எதிர்த்து, 'ஹர்த்தால்' (பொது வேலை நிறுத்தம்) அனுஷ்டிக்கும்படி அவர் அறைகூவல் விடுத்தார். இந்த ஹர்த்தால் எதிர்பார்த்ததற்கும் மேலாகப் பெரு வெற்றி கண்டது. இதனல் வெறி கொண்ட வெள்ளை அரசாங்கம் கோரமான அடக்கு முறையைக் கட்டவிழ்த்து விட்டது. இந்த வெறித் தாண்டவத்தின் விளைவாக, அன்றைத் தினத்தில் பஞ்சாப் அமிர்தசரஸில் ஜாலியன் வாலாபாக் மைதானத்தில் கூடிய பொது மக்களை நூற்றுக் கணக்கில் நாய்களைப் போல் சுட்டுக்கொன்று, சரித்திரத்தின் அழியாத பழியையும் பாவத்தையும் அள்ளிக் கட்டிக் கொண்டது. பஞ்சாப் படுகொலை இந்திய மக்களின் ஆக்ரோஷத்தையும் தர்மாவேசத்தையும் கிளறிவிட்டது. இதன் பின்னர்தான் காந்தியடிகள் சத்தியாக்கிரக இயக்கத்தை நாடு தழுவிய வெகுஜன இயக்கமாக விரிவாக்கத் திட்டமிட்டார்; ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கினர்; பதவிகளையும் உத்தியோகங்களையும் பகிஷ்கரிக்கச் சொன்னர்; சுதேசிய இயக்கத்தையும் வலுப்படுத்துவதற்காக, கைராட்டை இயக்கத்தையும் தொடங்கினர். "1920-ம் ஆண்டில் டிசம்பர் மாதத்தில் நாகபுரியில் நடந்த காங்கிரஸின் வருடாந்தர மாநாட்டின் போது இருபத்து இரண்டாயிரம் பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள். மேலும் அவர்கள் நாட்டின் முன் வைக்கப்

பட்ட புதிய திட்டத்தை மிகுந்த உற்சாகத்தோடு முற்றிலும் ஏகமனதாக ஏற்றுத் தீர்மானமாக நிறைவேற்றினர்கள். காங்கிரஸின் கொள்கை மாறியது. சட்ட ரீதியான மார்க்கங்களில் 'சாம்ராஜ்யத்துக்குள் அடங்கிய குடியேற்ற நாட்டின் சுயாட்'சியாக, அது இனியும் இருக்கவில்லை; மாருக, 'சமாதானமான, நியாயமான முறைகளின் மூலம் சுயராஜ்யத்தைப் பெறுவது' என மாறியது. காங்கிரஸ் ஸ்தாபனம் அதன் முன்னைய கட்டுப்பாடற்ற குணத்தைக் கைவிட்டது; அந்த ஆண்டின் நிரந்தர நிர்வாகக் குழு அங்கத்தினர்களாகப் பதினைந்து பேர் கொண்ட ஒரு காரியக் கமிட்டியையும், எல்லா வட்டாரங்களிலும் எட்டுமளவுக்கு ஆங்காங்கே காங்கிரஸ் ஸ்தாபனங்களையும் அமைக்கும் திட்டத்தோடு, ஒரு நவீன காலக் கட்சியின் தன்மைகளை அது தரித்துக் கொண்டது. காங்கிரஸ் அதன் பழைய காலப் 'பெரிய மனித'த் தன்மைக்குக் கும்பிடு போட்டு வழியனுப்பிவிட்டது. தேச சுதந்திரத்தை எய்துவதற்காக, அரசாங்கத்தை எதிர்த்துப் போராடும் போராட்டத்தில் அது வெகுஜனங்களின் தலைவனுக விளங்கியது. ஒன்றுபட்ட, போர்க் குணம் மிக்க தேசிய இயக்கத்தின் கேந்திரமாக மாறியது.'' (இந்தியா சுதந்திரத்துக்காகப் போராடுகிறது—ஹிரேன் முகர்ஜியின் நூல்).

1920-ம் ஆண்டின் இறுதியில் நடந்த இந்த மாநாட்டுக்குப் பின்னர் 1921-ம் ஆண்டின் ஆரம்பத்திலேயே ஒத்துழையாமை இயக்கம் சூடு பிடித்துவிட்டது. அதற்குமுன் இந்திய சரித்திரம் என்றுமே கண்டிராத அளவுக்கு விரிந்து பரந்த வெகுஜன இயக்கமாக, அந்த இயக்கம் அந்த ஆண்டு முழுவதுமே நிகழ்ந்தது; இந்திய சரித்திரத்திலேயே புதியதொரு பூரிப்பூட்டும் அத்தியாயம் தொடங்கப் பெற்ற காலம் இது; காந்தியடிகள் இந்திய நாட்டின் ஒப்பற்ற தலைவராக உருமாறிய காலம் இது.

இத்தகைய கால கட்டத்தில் நமது இரு பெருங்கவிஞர் களும் எத்தகைய கருத்துக்களைத் தெரிவித்தார்கள்? பாரதியைப் பொறுத்த வரையில், காந்தியடிகள் இந்தியாவுக்கு வருமுன்பே, 1909-ம் ஆண்டிலேயே, இந்திய தேசிய காங்கிரஸின் தலைமைப் பொறுப்பை ஏற்கத் தகுதியான நபர் காந்தியடிகள்தான் என்பதைத் தீர்க்கதரிசனம் போல் கண்டு, அதனை "ராஜதந்திர முறைமையில் நல்ல ஸூக்ஷ்மமான புத்தியுடன் யோசித்துப் பார்த்து"க் கூறிவிட்டார். இவ்வாறு நெடிது நோக்கும் அரசியல் தெளிவும் தீக்ஷண்யமும் பாரதியிடமிருந்தது என்பதை நாம் காண்கிறோம். காந்தியடிகளைக் காங்கிரஸ் அக்கிராசனாதிபதியாகக் காணப் பாரதி கண்ட கனவு, பாரதியின் மறைவுக்குப் பின்னர் 1924-ம் ஆண்டில்தான் பலிதமாயிற்று. எனினும் காந்தியடிகள் மக்களின் அபிமானத்தையும், தலைவர்களின் அங்கீகாரத்தையும் பெற்ற தலைவராக விளங்குவதைப் பாரதி தம் வாழ்நாளிலேயே கண்டுவிட்டார். சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்குவதற்கு முன்னர் காந்தியடிகள் சென்னை வந்திருந்தபோது, பாரதி அவரை நேரில் சந்தித்து, அவர் தொடங்கப்போகும் இயக்கத்தை "ஆசீர்வதிக்கவும்" செய்தார் என்று பார்க்கிறோம். மேலும் பயங்கர இயக்கம், பலாத்காரம் ஆகியவற்றை "இந்தியப் பண்புக்கே விரோதமான அநாகரிகமான செயல்கள்" எனக் கருதிய பாரதி, காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தின் சாராம்சத்தை எடுத்த எடுப்பிலேயே நன்கு உணர்ந்து கொண்டார். இந்திய நாட்டுக்குக் காந்தியடிகளின் மார்க்கமே உகந்தது என்றும் கருதினார். எனவேதான் அவர் காந்தியடிகளை "வாழ்விக்க வந்த காந்தி" என வாயார வாழ்த்தினார். காந்தியடிகளைச் சஞ்சீவி கொணர்ந்த அனுமனைப் போலவும், இடி மழையிலிருந்து காப்பாற்ற, கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்த கண்ணனைப் போலவும் கருதினார். "நெருங்கிய பயன்சேர் 'ஒத்துழையாமை' நெறியினால், இந்தியாவுக்கு வருங்கதி கண்ட" மகாத்மாவாகக் கண்டார். (மகாத்மா காந்தி பஞ்சகம்).

**காந்திசொல் கேட்டார், காண்பார்**
**விடுதலை கணத்தினுள்ளே !**

என்றும் (பாரத மாதா நவரத்தின மாலை) அவர் உறுதி கூறினர்.

ஆனால் தாகூரோ பாரதியைப் போல் ஒத்துழையாமை இயக்கத்தின் தன்மையை உணரவில்லை. 1919-ம் ஆண்டில் பஞ்சாப் படுகொலை நிகழ்ந்த சமயத்தில், அவர் ஆங்கிலேய அரசாங்கம் தமக்கு வழங்கியிருந்த 'சர்' பட்டத்தை உதறித் தள்ளி, தமது ஆழ்ந்த மனிதாபிமானத்தையும் தர்மாவேசத்தையும், தேச பக்தியையும் புலப்படுத்தினர். அந்தப் பட்டத்தைத் துறந்த காலத்தில் அவர் பின்வருமாறு தெரிவித்தார் : ''கௌரவப்பட்ட சின்னங்களெல்லாம், அவமானம் தரும் அபத்தமான சந்தர்ப்பத்தில் எங்களது வெட்கக்கேட்டை வெளிச்சமிட்டுக் காட்டும் காலம் வந்து விட்டது. எனவே, அற்பமானது என்று சொல்லப்படும் தமது நிலைமையினால், மனிதப் பிறவிகளுக்கே பொருந்தாத ஓர் இழிவை அனுபவிக்க நேர்ந்துள்ள என் நாட்டு மக்களின் பக்கமாக, நான் எல்லாப் பிரத்தியேகமான கௌரவங்களையும் துறந்துவிட்டு, என் பங்குக்கு நிற்க விரும்புகிறேன்.'' இவ்வாறு கூறித் தமது பட்டத்தைத் துறந்து தமது ''நாட்டு மக்களின் பக்கமாக நிற்க விரும்பிய'' தாகத் தெரிவித்த போதிலும், பஞ்சாப் படுகொலையின் பின்விளைவாகத் தோன்றிய தேசிய எழுச்சியிலும், ஒத்துழையாமை இயக்கத்திலும் தாகூர் நிற்க விரும்பவில்லை. காந்தியடிகள் தொடங்கிய கைராட்டை இயக்கத்தின் சுதேசிய சாராம்சத்தை உணராமல், தாகூர் அதனை நிராகரித்தார். ஒத்துழையாமை இயக்கக் காலத்தில் அவர் காந்தியடிகளின் கருத்தோடு பகிரங்கமாக மாறுபட்டு நின்றார். இந்தச் சந்தர்ப்பத்தில் காந்தியடிகளுக்கும் தாகூருக்குமிடையே நடந்த பகிரங்கமான விவாதங்கள் சரித்திரப் பிரசித்தமானவை. இதனைக் குறித்து, ஹிரேன் முகர்ஜி எழுதியுள்ள வரிகள் அன்றைய சந்தர்ப்

பத்தில் இந்த இருபெரும் மேதைகளும் எத்தகைய வேறு பட்ட நிலைகளில் நின்றார்கள் என்பதை நாம் புரிந்துகொள்ள உதவும். அவை வருமாறு:

"இந்தச் சந்தர்ப்பத்தை யொட்டித்தான் காந்திஜீக்கும் தாகூருக்குமிடையே ஒரு சரித்திரப் பிரசித்தி பெற்ற விவாதம் நடந்தது. 1921-ம் ஆண்டு அக்டோபர் மாதத்திய 'மாடர்ன் ரெவ்யூ' பத்திரிகையில், கவிஞர் 'உண்மைக்கோர் விண்ணப்பம்' என்ற தலைப்பில் உண்மையில் ஒரு பிரகடனத்தையே வெளியிட்டார். அதில் காந்திஜியைப் பற்றிக் கவிஞர் அழகான வார்த்தைகளில் அஞ்சலி செலுத்தியிருந்த போதிலும்கூட, காந்திஜிக்குக் குருட்டுத்தனமாகப் பணிந்து செல்லும், நாடு தழுவிய வெறிப் போக்கை எதிர்த்து, அவர் ஒரு கலகக்குரலை எழுப்பினர். 'ஜனக்கூட்டத்தின் வெறிப் போக்கை அவர் மட்டம் தட்டினர். இந்தியா எதிர்மறைப் போக்கான ஓர் அத்தியாயத்தையே என்றென்றும் கடைப் பிடித்து, மற்றவர்களின் தவறுகளின்மீதே நிரந்தரமாய் நின்று நிலைக்கவும், ஒரு பகைமையின் அடிப்படையில் சுயராஜ்யத்துக்குப் போராடவும் வேண்டுமா என்று அவர் கேட்டார். உதய காலத்தினல் விழிப்புற்ற பறவை தனது உணவைப் பற்றி மட்டும் நினைப்பதில்லை; அதனுடைய இறக்கைகள் வானத்தின் அழைப்பையேற்றுச் செயல்படுகின்றன; அதன் கண்டத்தில் நாளின் வரவை வரவேற்கும் ஆனந்தமான கீதங்கள் நிறைகின்றன—என்றார் அவர். ஒரு புதிய மனித சமூகம் தனது அறைகூவலை விடுக்கும்போது, இந்தியா தனது சொந்த, மகோந்நதமான மார்க்கத்திலேயே பதிலளிக்கட்டும் என்று அவர் வேண்டிக் கொண்டார்.... இதற்குக் காந்திஜி தமது 'யங் இந்தியா' (அக்டோபர் 13, 1921) பத்திரிகையில் 'மாபெரும் காவலர்' என்ற தலைப்பில் ஒரு மறக்க முடியாத கட்டுரைமூலம் பதிலளித்தார். 'உரிமை இழந்தவர்களின் மத்தியில் வாழ்வதற்காக, கவிதா சஞ்சாரங்களையெல்லாம் கைவிட்ட, கருணை மிகுந்த ஒரு போதி சத்துவரைப் போல' காந்திஜி வழக்கத்துக்கு மாறான உணர்ச்சி

வேகத்தோடு எழுதினர். பிறரின் விவாதத்துக்குத் தமது அறிவை அடிபணியச் செய்தல் கூடாது என்று அவர் அழுத்த மாகக் கூறிவிட்டு, மேலும் பின்வருமாறு எழுதினர்: 'கவிஞர் எதிர் காலத்துக்காக வாழ்கிருர் ; நாமும் அவ்வாறே வாழவும் அவர் விரும்புகிருர். போற்றிப் பனுவல்களைப் பாடிக் கொண்டு, அருணோதயப் பொழுதில் வானத்தில் ஏறிப் பறக்கும் பறவைகளைப் பற்றிய அழகான காட்சியை நமது வியப்பூட்டும் பார்வைக்கு அவர் வழங்குகிருர். அந்தப் பறவைகளோ தமது அன்றைய உணவை உண்டு விட்டன. முந்திய இரவில் பெற்ற ஓய்வில், ரத்த நாளங்களில் புதிதாகப் பாய்ந்த ரத்தத்தின் பலத்தோடு அவை வானில் உயர்ந்து பறந்து விட்டன. ஆனுல் தமது இறக்கைகளை அசைப் பதற்குக்கூட வலிமையற்றுப்போய், வெறுமனே பார்த்துக் கொண்டிருக்கும் பறவைகளின் வேதனையைத்தான நான பெற்றிருக்கிறேன். இந்திய வானின் கீழுள்ள மனிதப் பறவையோ, தான் ஓய்வு பெறப்போவதாகப் பாசாங்கு செய்த பொழுதைக் காட்டிலும் பலவீனமான நிலையில் விழித் தெழுகிறது லட்சோப லட்சக் கணக்கானவர்களுக்கு அது ஒரு நிரந்தரமான உபவாசம்; அல்லது நிரந்தரமானதொரு மயக்க நிலை. துன்பப்படும் நோயாளிகளைக் கபீரின் பாட்டொன்றின்மூலம் இதப்படுத்த இயலாது என்பதை நான் கண்டிருக்கிறேன்.. கலையின் கனவுக்கு முன்னுல், 'எனது இருப்பை நிராகரிக்கத் துணிகிருயா?' என்று உலகத்தின் துயரமானது எழுந்து நின்று கேட்பதுதான் இது. காந்தி ஜியை இது அமைதி பெறச் செய்யவில்லை. எனவே அவர் கவிஞருக்குப் பக்தி சிரத்தையோடு பின்வருமாறு உபதேசம் செய்தார்: "மற்றவர்களைப் போல் தாகூரும் நூற்கட்டும்; மற்றவர்களைப் போல் அவரும் தமது அன்னியத் துணிமணி களைச் சுட்டெரிக்கட்டும்; அதுதான் இன்றைய கடமை. நாளையைப் பற்றிக் கடவுள் கவனித்துக் கொள்வார். கீதையில் சொல்வது போல், கடமையைச் செய்யுங்கள்...!" (இந்தியா சுதந்திரத்துக்காகப் போராடுகிறது: ஹிரேன் முகர்ஜியின் நூல்).

தாகூர் கவிதையாலான "தந்தக் கோபுரத்" தில் வாழ்ந்த காரணத்தால் அவர் பறந்து இசைபாடும் பறவைகளைக் கண்டார்; காந்தியடிகளோ பூமிப் புழுதியில் காலூன்றி நின்றதால், உணவற்று, உறக்கமற்று, பறக்கவும் சீவனற்றுப் பரிதாபமாகக் கிடக்கும் லட்சோப லட்சக் கணக்கான பறவைகளைக் கண்டார். இதனால்தான் தாகூர் காந்தியடிகளின் தேசிய இயக்கத்தின் தன்மையை உணரத் தவறிவிட்டார். இதற்குக் காரணம் தாகூரின் தனிமனிதத்துவத் தன்மையின் பிடிப்புத்தான். எனவேதான் வெகுஜன இயக்கமென்பது அவருக்கு வெறும் குரோத பாவத்தின் கொடுமையாகப் பட்டது. "ஒத்துழையாமை இயக்கம் பற்றிய அவரது போக்கை விமர்சனம் செய்து, 1922-ம் ஆண்டில் ஒரு குஜராத்திக் கவிஞர் தாகூருக்கு எழுதிய பகிரங்கக் கடிதத்துக்குப் பதிலளிக்கும் போது, தாகூர் தமது கருத்தைப் பின் வருமாறு தெளிவாகத் தெரிவித்தார்: "எனது சக்திகளின் எல்லைகளை நான் முற்றுகத் தெரிந்திருப்பதால், கட்டுப்படுத்துவது எவ்வாறு என்பதை நான் கண்டுகொள்ள மாட்டாத குருட்டுச் சக்திகளின் விஷயத்தில் என்றும் ஈடுபடத் துணியாமல், எனது சொந்தத் தொழில் என நான் கருதுவதுடனேயே என்னைக் கட்டுப்படுத்தி நின்று கொள்கிறேன்." (தாகூரும், ரோலந்தும்—டாக்டர் கிரிஜா முகர்ஜி: கட்டுரை).

ஆம், காந்தியடிகளின் தலைமையில் விழிப்புற்றெழுந்த வெகுஜன இயக்கத்தை, தமது 'கூட்ட மனோபாவம்' பற்றிய கருத்தின்படியே, "குருட்டுச் சக்திகள்" என மதிப்பிட்டு விட்டார் தாகூர். ஆனால் பாரதியோ காந்தியடிகளின் தேசிய இயக்கப் பிரவேசத்தை, "விடிவிலாத் துன்பம் செய்யும் பராதீன வெம்பிணி" யகற்ற வந்த பரிதியொளியின் வரவாகக் காண்கிறார். காந்தியடிகளுக்கும், தாகூருக்கும் இவ்வாறு கடுமையான விவாதம் நடந்து வந்த காலத்தில், பாரதி தமது ஆயுள் முடிந்து அமரராகி விட்டார். தாகூருக்கும் காந்தியடிகளுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமையைப் பற்றி,

பண்டித நேரு கூறியுள்ள சில வரிகளும் நமக்குத் தாகூரைப் புரிந்துகொள்ள உதவும் : "பாட்டாளிகளின்பால் அனுதாபம் கொள்ளும் ஜனநாயகவாதியாக மாறிய பணக்கார வர்க்கக் கலைஞரான தாகூர், முக்கியமாக இந்தியாவின் கலாசார மரபை, வாழ்க்கையை அதன் முழுமையோடு ஏற்று, அதன் மூலம் அதில் பாட்டோடும் நாட்டியத்தோடும் வாழும் மரபைப் பிரதிநிதித்துவப் படுத்தினர். பெரிதும் மக்களின் மனிதரான ஏறத்தாழ இந்திய விவசாயியின் திரண்ட வடிவ மான காந்தியோ, இந்தியாவின் மற்ெருரு பழமையான மரபை, பற்றறுத்தலும் துறவு வாழ்க்கை வாழ்வதுமான மரபைப் பிரதிநிதித்துவப் படுத்தினர். எனினும் பிரதான மாக, தாகூர் ஒரு சிந்தனையாளர்; காந்தியோ முனைப்பு மிகுந்த ஓய்வறியாது, செயலாற்றும் மனிதர்." (இந்திய தரிசனம்; நேரு).

பாரதிக்கு அரசியல் துறையில் தீர்க்க தரிசனமான திருஷ்டி இருந்ததைப் போலவே, பொருளாதாரத் துறையி லும் இந்தியாவின் எதிர்காலம் பற்றிய ஓர் லட்சியம் இருந் தது. ஆம். பொருளாதாரத்துறையில் பாரதி சமத்துவத்தை நாடும் கவிஞராகவும், அதைப்பற்றித் தெள்ளத் தெளிவான கருத்துக்கள் கொண்டவராகவும் இருந்தார். இந்திய நாடு அரசியல் சுதந்திரம் பெற வேண்டியது முதல் தேவை; அந்தத் தேவை பூர்த்தியாக வேண்டுமென்பதற்காக, அவர் அரசியலி லும் தம் பங்கைச் செலுத்தினர். அதே சமயம் அரசியல் சுதந் திரத்தோடு இந்திய விடுதலை பூரணமாகி விடுமென அவர் கருதவில்லை. மனிதர்களிடம் எல்லாவிதத்திலும் சமத்துவம் நிலவ வேண்டும், சுரண்டலும் கொள்ளையும் ஒழிய வேண்டும், பொருளாதார சமத்துவம் ஏற்பட வேண்டும் என்றெல்லாம் வேட்கை கொண்டவர் அவர். அதனால்தான் தமது "வந்தே மாதர கீத"த்திலேயே அவர்,

**எப்பதம் வாய்த்திடு மேனும்—நம்மில்**
**யாவர்க்கும் அந்நிலை பொதுவாகும்;**

**முப்பது கோடியும் வாழ்வோம்—வீழில்**
**முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்!**

எனப் பாடினர். இதேபோல் தமது "விடுதலை"ப் பாட்டிலும்,

**ஏழையென்றும், அடிமையென்றும்**
**எவனுமில்லை ஜாதியில்;**
**இழிவு கொண்ட மனிதரென்பது**
**இந்தியாவில் இல்லையே!**
**வாழி கல்வி செல்வம் எய்தி**
**மனமகிழ்ந்து கூடியே**
**மனிதர் யாரும் ஒரு நிகர்**
**சமானமாக வாழ்வமே !**

என்று முழக்கமிட்டு, சமத்துவத்தை சரி, நிகர், சமானம் என்று அழுத்தத்தோடு முக்காலும் வற்புறுத்தினர். மேலும் 1907-ம் ஆண்டிலேயே எழுதப்பட்ட "சுதந்திரப் பள்ளு" என்ற பாடலோ பள்ளர் களியாட்டத்துக்காக எழுதப்பட்ட பாடல். அந்தப் பாடலில் எடுத்த எடுப்பிலேயே அவரது சமத்துவ வேட்கை வெளிப்படுகின்றது. "ஆனந்த சுதந்திரம்" என்ருல் அது அரசியல் சுதந்திரம் மட்டுமல்ல, சமத்துவ சுதந்திரமும் சேர்ந்தால்தான் ஆனந்த சுதந்திரமாகும் என்ற தொனி அதிலேயே ஒலிக்கிறது. "ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று" பள்ளர்கள்—அதாவது தாழ்த்தப்பட்டு, ஒடுக்கப்பட்டு, அடக்கப்பட்டு, சுரண்டப்பட்டுக் கிடக்கும் மக்கள்—பாடியாட வேண்டும் என்பதே அவரது கருத்து. எனவேதான்,

**எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு !**

என்று பாடிய அதே மூச்சில்,

**—நாம்**

**எல்லோரும் சமமென்பது உறுதியாச்சு !**

என்றும் அவர் பாடுகிருர். அத்துடன் நில்லாமல்,

**எல்லோரும் ஒன்றென்னும் காலம் வந்ததே—பொய்யும்**
**ஏமாற்றும் தொலைகின்ற காலம் வந்ததே!**

என்றும் அவர் சொல்கிறார். இறுதியிலோ, சமத்துவ வாழ்க்கையான லட்சிய மார்க்கக் கோஷங்களை வரையறுப்பதுபோல்,

**உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்—வீணில்**
**உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்**
**விழலுக்கு நீர்பாய்ச்சி மாயமாட்டோம்—வெறும்**
**வீணருக் குழைத்துடலம் ஓயமாட்டோம்!**

என்று உத்வேகத்தோடு முழக்கமிடுகிறார். இவ்வாறு தமது கவிதைகள் பலவற்றிலும் பாரதி சமத்துவக் கொள்கையை வற்புறுத்தியுள்ளதை நாம் பரக்கக் காணலாம். இத்தகைய கருத்துக்களையெல்லாம், அவர் ஏதோ ஒரு கவிதா ஆவேசத்தில், உணர்ச்சி வேகத்தில் கூறிவிட்டார் என்றும் எவரும் நினைக்க வேண்டியதில்லை. எந்த வித ஆவேசமும், உணர்ச்சி வேகமும் இல்லாமல், நின்று நிதானித்து எழுதியுள்ள கட்டுரைப் பகுதிகளிலும் அவர் சமத்துவக் கொள்கையைப் பற்றிய தமது திட்டவட்டமான கருத்துக்களைத் தெரிவித்துள்ளார். அவற்றிலிருந்து அவர் அந்தக் கொள்கையைப் பற்றிக் கொண்டிருந்த தெளிவு நமக்கு எளிதில் புலப்படும். அவற்றில் சிலவற்றை மட்டும் நாம் இங்கே பார்ப்போம்.

'ஸமத்துவம் என்பது யாது?' என்ற உபதலைப்பிலேயே அவர் ஒரு சிறு குறிப்பு எழுதியுள்ளார் (கட்டுரைகள் : கலைகள்). அது வருமாறு :

''ஸமத்துவக் கொள்கையிலே இரண்டு செய்திகளைப் பற்றிய விசாரணை உண்டாகிறது. முதலாவது, செல்வத்தை உண்டாக்குதல்; இரண்டாவது அதைப் பங்கிட்டுக் கொடுத்தல். முதலாவது செய்தியில், தொழிலைப் பற்றிய ஆராய்ச்சி ஏற்படுகிறது. இரண்டாவது செய்தியில் கடவுளைப் பற்றிப் பேச்சு.

முதல் விஷயம் திறமைகளின் உபயோகத்தைப் பற்றியது.

இரண்டாம் விஷயம் இன்பங்களைப் பங்கிட்டுக் கொடுப்பதைப் பற்றியது.

திறமைகளை உபயோகப் படுத்துவதனாலே ஜன வலிமை உண்டாகிறது.

இன்பங்களை நேரே வகுத்தால் ஒவ்வொருவனுக்கும் இன்பம் உண்டாகிறது.

நேரே வகுத்தல் என்றால் ஒன்று போல் வகுத்தல் என்று அர்த்தமில்லை.

நியாயமாக வகுத்தல் என்று அர்த்தம். நியாயமே சமத்துவத்தின் பெயர்; நியாயமே முதலாவது சமத்துவம்.''

இந்தக் குறிப்பில் 'திறமைக் கேற்ற ஊதியம்' என்னும் சமத்துவக் கொள்கையின் முதலாவது படியான 'சோஷியலிஸம்'' என்ற லட்சியத்தைத்தான் பாரதி வேறு விதத்தில் குறிப்பிடுகிறார் என்பது தெளிவு. இவ்வாறு எழுதிய பாரதி இதனை ஒரு விளக்கமாக மட்டும் எழுதவில்லை. ''மேலே கூறிய ஜன வலிமை, சர்வசுகம் என்ற இரண்டும் சேர்ந்தால், ஜனச்செம்மை ஏற்படுகிறது. மனிதன் செல்வனாவான். குடிகள் விடுதலை பெற்றிருப்பர். நாடு உயர்வு பெற்றிருக்கும்'' என்று அதனால் விளையும் பயன்களையும் அறுதியிட்டுக் கூறுகிறார். மேலும், சோஷியலிஸக் கொள்கையைப் பற்றி, அவர் பிறிதோரிடத்தில் மேலும் தெளிவாகக் கூறுகிறார் : ''செல்வத்தைக் குறித்த வேற்றுமைகளையும் இல்லாமற் பண்ணிவிட வேண்டும் என்ற கொள்கையும் உலகத்தில் மிகத் தீவிரமாகப் பரவி வருகிறது. ஐரோப்பாவிலேதான் இந்த முயற்சி வெகு மும்முரமாக நடந்துவருகிறது. ஒரு தேசத்தில் பிறந்த மக்கள் அனைவருக்கும் அத்தேசத்தின் இயற்கைச் செல்வம் முழுவதையும் பொது

வுடைமையாக்கிவிட வேண்டும் என்ற கொள்கைக்கு இங்கிலீஷில் 'சோஷியலிஸ்ட்' கொள்கை என்று பெயர்." (கட்டுரைகள் : சமூகம்).

இத்தகையதொரு சமூக அமைப்பு நம் நாட்டிலும் தோன்ற வேண்டும் என்பதும் பாரதியின் விருப்பம். "ஜனவகுப்பு" என்ற கட்டுரையில் அவர், "எங்கிருந்தோ வந்து இவ்வுலகத்தில் சில நாள் இருந்துவிட்டுப் போகிறோம். செத்த பிறகு நம்முடைய கதி என்னவாகுமோ? கடவுளுக்குத்தான் தெரியும். மூன்றே முக்கால் நாழிகை உயிர் வாழ்வது சந்தோஷத்துடன் இருந்துவிட்டுப் போகக் கூடாதா? அடாடா! இந்தப் பூமியில் மனித உயிருக்கு எத்தனை கஷ்டம், எத்தனை பயம், எத்தனை இடையூறு, எத்தனை கொலை, எத்தனை துரோகம், எத்தனை பொய், எத்தனை கொடுமை, எத்தனை அநியாயம், ஐயோ பாவம்!" என்று மானிட வாழ்வின் அவலத்தை அடுக்கடுக்காய்ச் சொல்லி அங்கலாய்க்கிறார். இந்த அவலத்தைப் போக்க வழி என்ன? அதற்கு முதல் வழியாக, அவர் சோஷியலிஸக் கொள்கையை இனம் காட்டுகிறார். அவரது கூற்று வருமாறு: "முதலாவது, சிலருக்குச் சோறு மிதமிஞ்சி இருக்க, பலர் தின்னச் சோறில்லாமல் மடியும் கொடுமையைத் தீர்த்துவிட வேண்டும். இது இலக்கம் ஒன்று. பூமியின் மீதுள்ள நன்செய், புன்செய், தோப்பு, துரவு, சுரங்கம், நதி, அருவி, குப்பை, செத்தை, தரை—கடவுளுடைய சொத்தில் நாம் வேலி கட்டக்கூடிய பாகத்தையெல்லாம்—சிலர் தங்களுக்குச் சொந்தமென்று வேலி கட்டிக் கொண்டனர். பலருக்கு ஆகாசமே உடைமை. வாயு ஆகாரம். இதற்கு மருந்து என்னவென்றால், எல்லோரும் சமானம், அண்ணன் தம்பிபோல என்ற புத்தி உண்டாய், ஏழைகள் வயிறு பசிக்காமல் செல்வர்கள் காப்பாற்ற வேண்டும். அது முடியாவிட்டால், ஐரோப்பாவில் சோஷியலிஸ்ட் கட்சியார் சொல்வதுபோல, நிலத்தைச் சகலருக்கும்

பொதுவென்று ராஜ்ய விதி ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்." (கட்டுரைகள் : தத்துவம்).

இனி, தாகூர் பொருளாதார சமத்துவம் பற்றி எத்தகைய கருத்துக்களைத் தெரிவித்துள்ளார் என்பதற்கு ஓரிரண்டு உதாரணங்களைப் பார்க்கலாம். சோஷிய லிஸத்தைப் பற்றியே தாகூர் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

"செல்வத்தைக் கூடியபட்சம் சமமாக விநியோகிப்பது என்ற சோஷியலிஸ லட்சியம் நிறைவேறக் கூடியது தானா என்பது எனக்குத் தெரியாது ; அவ்வாறு இயலா விட்டால், ஆண்டவன் விதித்துள்ள விதாசாரம் உண்மையில் கொடுமையானதுதான்; மனிதனும் உண்மையில் துரதிருஷ்ட சாலியான பிராணிதான். ஏனெனில் இந்த உலகில் வறுமை நிலவத்தான் வேண்டுமென்றால், அவ்வாறே நிலவட்டும். என்றாலும், அதனை நீக்குவதற்கு இடை யறாது போராடவும், நம்பிக்கை கொள்ளவும், மனித சமுதாயத்தின் உன்னதமான ஒரு பகுதியினரைத் தூண்டு வதற்குதவும் ஏதாவது ஒரு சிறிய சந்து பொந்தேனும், சாத்தியப்பாடு பற்றிய சில சாயைகளேனும் இருக்கட்டும்... ஒவ்வொருவருக்கும் ஒரு வாய் உணவும், ஒரு முழத் துணியும் வழங்குமளவுக்கு உலகத்தின் உற்பத்தியைப் பங்கிடு செய்ய முடியும் என்று சொல்பவர்கள் ஒரு படுசிரம மான விஷயத்தைத்தான் சொல்கிறார்கள்; அது ஓர் உட்டோப்பியன் கனவுதான். இத்தகைய சமுதாயப் பிரச்சினைகள் எல்லாமே சிரமமானதுதான் ! விதியோ மனித சமுதாயத்துக்கு, பரிதாபகரமான அளவுக்குக் குறைந்த ஒரு போர்வையைத்தான் வழங்கியுள்ளது. அதனை உலகின் ஒரு பக்கமாக இழுத்துப் போர்த்தினால், மறு பக்கத்தைத் திறந்துபோட வேண்டியிருக்கிறது. நமது வறுமையைக் குறைப்பதால், நாம் நமது செல்வத்தை இழக்கிறோம்; இந்தச் செல்வத்தோடு, எத்தகைய ஒயிலும், அழகும், பலமும் மிகுந்த உலகத்தையும் நாம் இழந்துவிடு கிறோம்!..."

ஆம், உலக மனிதனைக் கனவு கண்ட மனிதாபிமானி யான தாகூரின் கூற்றுத்தானு இது என்று நாம் ஆச்சரியப் படும் விதத்தில் இருக்கிறது, தாகூரின் இந்தக் கூற்று ! இது தெரிவிக்கும் கருத்துக்களென்ன ? சோஷியலிஸ லட்சியத்திலும், அதன் வெற்றியிலும் தாகூருக்குச் சந்தேகம்; அதில் அவருக்கு நம்பிக்கையில்லை. ஏற்றத் தாழ்வு இருப்பதுதான் ஆண்டவனின் விதி என்ருல் அந்த விதி கொடியதுதான்; எனவே மனிதன் துர்ப்பாக்கியசாலி. வறுமைக்கு மாற்றில்லை என்ருல், அது அவ்வாறே இருந்து விட்டுப் போகட்டும். ஒருவேளை மாற்று உண்டா? இருப்ப தாகத் தாகூருக்குத் தெரியவில்லை. ஆனுலும் வறுமையைப் போக்க முடியும் என்று நம்பிக்கை வழங்கக் கூடிய சாயைகள் மட்டும் அவருக்கு நிலவ வேண்டுமாம். அவை எதற்கு? வெற்றி கிட்டாது என்று தெரிந்தும் உன்னதமான மனிதர்கள் வெறுமனே போராடுவதற்கு ! சரி, எல்லோ ருக்கும் உணவும், உடையும் வழங்குவது சாத்தியமா ? அது ஒரு கனவு! ஏனெனில் இந்த உலகமே பஞ்சை உலகம். இதில் எல்லோருக்கும் வழங்கக்கூடிய செல்வம் இல்லை. ஒருவன் அனுபவித்தால் இன்னொருவன் பட்டினி கிடக்கத்தான் நேரும். மேலும் செல்வத்தைப் பங்கீடு செய்வதென்ருல், அதன்மூலம் வறுமையைக் குறைக்க முயன்ருல், செல்வம் பெற்றவர்களின் செல்வம் குறைந்து போகும்; செல்வம் குறைந்துபோனுல், அவர்கள் அனுபவித்து வந்த ஒயிலும் அழகும் நிறைந்த உல்லாச வாழ்வும் வளமும் பாழாகிப் போய்விடும்! — இதுதான் தாகூரின் கருத்து! ஆம். இங்கே நாம் மனிதாபிமானியான தாகூரின் குரலைக் கேட்கவில்லை; மாருக, "அந்தக் காலத் திலிருந்த ஏனைய பிராமண ஜமீன்தார்களிலிருந்து அப்படி யொன்றும் மாறுபடாத" (ஹுமாயூன் கபீர்) ஜமீன்தார் தாகூர் பிர ுவின் குரலைத்தான் கேட்கிரேம் !

ஆனுல் பாரதியோ வறுமை இருந்துவிட்டுப் போகட்டும் எனக் கூறவில்லை. அதற்கு மாருக,

**இனியொரு விதி செய்வோம்—அதை
எந்த நாளும் காப்போம்!
தனி யொருவனுக்கு உணவில்லையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்!**

என்று ஆக்ரோஷமாக முழக்கமிட்டவர். ஏற்றத் தாழ்வும் வறுமையும் ஆண்டவனின் விதியா? "சகல ஜனங்களுக்கும் வயிறு நிறைய உணவு கிடைக்காத ஊரில் வாழும் செல்வர்கள் எல்லாம் திருடர்; அங்கே குருக்களெல்லாம் பொய்யர்" என்பது பாரதி வாக்கு (புதிய உயிர் : கட்டுரை). வறுமையைப் போக்க முடியுமா?

**இல்லையென்ற கொடுமை—உலகில்
இல்லையாக வைப்பேன்!**

என்று தன்னம்பிக்கையோடு வீர சபதம் ஏற்றவர் பாரதி. ஆம். பாரதி மனித குலம் முழுமையின்மீதும் நம்பிக்கை கொண்டவர். அந்த மனித சக்தியின் ஆற்றலினாலும், துணையினாலும் வறுமையைப் போக்க முடியும் என்று கருதியவர். தாகூரைப் போல் ஏதோ சில உன்னதமான "பெரிய மனிதர்கள்" மட்டும் ஏதோ நம்பிக்கையின் சாயையைக் கண்டு, கானலை நாடியோடும் மானைப்போல் போராடிப் பொழுதைப் போக்குவதற்கல்ல, வறுமைக்கு எதிரான போராட்டம் என்று கருதியவர். "ஒன்று பட்டால் உண்டு வாழ்வு" என்று கைமேலடித்து உத்தரவாதம் செய்தவர் பாரதி.

சரி, உலகமே பஞ்சையான உலகம்தானா? விஞ்ஞான பூர்வமான சோஷியலிஸ தத்துவத்தின் தந்தையெனப் போற்றப்படும் காரல் மார்க்ஸ், "உலகம் தேவையினால் வாடவில்லை; அமோகத்தினால்தான் வாடுகிறது. அமோகமான செல்வம் ஓரிடத்தில் சென்று குவிந்து விடுவதால்தான் வாடுகிறது" என்று சொன்னார். அறிவு பூர்வமாக மார்க்ஸ் கண்டறிந்து சொன்னதைக் கற்றறியாமலே பாரதி உணர்வு

பூர்வமாகக் கண்டறிந்து பின்வருமாறு எழுதுகிறுர்: ''மனிதர் அத்தனை பேருக்கும் போதுமான ஆகாரம் பூமிதேவி கொடுக்கும். பூமிதேவியின் பயனை நேரே கையாளத் தெரியாமலும், அறியாமையினுலும், தாறுமாருக விழல் படுத்தி, சோறு தேடும் இடத்தில் சோறு தேடாமல், ஒருவருக் கொருவர் கொல்ல வழிதேடி, பலர் வயிறு வாட, சிலர் வயிறு ஜீரண சக்தியில்லாமல் போக, மனிதர் பரிதாபமாகக் காக்கையிலும் கடைப்பட்ட வாழ்வு வாழ்ந்து வீணே நசித்துப் போகிறேம். 'ஏழைகள் வருந்திஞல் நமக்கென்ன?' என்று நினைப்பவர் மூடர். பலர் சௌகரியப்படும்வரை, சிலர் சௌகரியம் அடைதல் இந்த உலகத்தில் சாத்திய மில்லை.'' (கட்டுரைகள்: தத்துவம்). இதனையே தமது ''முரசு''ப் பாட்டில் பின்வருமாறு பாடுகிறுர்:

**வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு**
**வாழும் மனிதர் எல்லோர்க்கும்;**
**பயிற்றி உழுதுண்டு வாழ்வீர்—பிறர்**
**பங்கைத் திருடுதல் வேண்டாம்!**

இதனுலேயே பாரத சமுதாயத்தைப் பற்றிப் பாட வரும்போது, பாரத நாடு ''கனியும் கிழங்கும் தானியங்களும் கணக்கின்றித் தருநாடு'' என்று கூறி, இத்தகைய நாட்டில் ''மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வழக்கம் இனி யுண்டோ?'' என்று ஆவேசமாகக் கேட்கிறுர். ஆனுல் தாகூரோ செல்வத்தைப் பங்கிடுவதால் தமது செல்வத்தை யும் 'ஒயிலும் அழகும் பலமும்' நிறைந்த உல்லாச வாழ்க்கையையும் இழக்க நேருமே என்று அங்கலாய்க்கிறுர்.

என்ருலும் மனிதாபிமானியான தாகூர் சமுதாயத்தில் நிலவும் பொருளாதார வேற்றுமையின் கொடுமையைப் போக்கச் சிறிதும் எண்ணவில்லையா என்று கேட்கலாம். இதனைக் குறித்து அவர் தமது கருத்துக்களை இங்கு மங்கு மாகத் தெரிவித்துத்தான் இருக்கிறுர். ஆனுல் பொருளாதார ஏற்றத் தாழ்வைக் குறைப்பதற்கு, அவர் கூடிய பட்சமாகக்

கண்ட மார்க்கம் "சமாஜம்" எனப்படும் கூட்டுறவு வாழ்க்கை தான். அதாவது ஏழைகளைப் பணக்காரர்கள் அதிகமாகச் சுரண்டி விடாமல், அவர்கள் சமுதாய உணர்ச்சியோடும், பொறுப்போடும் நடந்து கொள்ளும் விதத்தில், ஒரு சமுதாய ஏற்பாட்டைச் செய்து கொள்வதுதான். தாகூரின் சமுதாய, பொருளாதார தத்துவத்தை மிகுந்த அனுதாபத்தோடும் அக்கறையோடும் ஆராயப் புகுந்த அறிஞரொருவர்கூட, தமது கட்டுரையின் இறுதியில் பின் வருமாறுதான் எழுதி யுள்ளார்: "இறுதியாக, தாகூர் தனிச் சொத்துரிமைக்கு எதிராக இருக்கவில்லை. ஆனால், அவர் சமுதாயக் கட்டுப்பாடு, சொத்தை அனுபவிப்பதில் ஓர் ஒழுங்குமுறை ஆகியவற்றுக்கு மிகவும் சாதகமாக இருந்தார். அவரது வார்த்தைகளில், 'தனிச் சொத்துடைமை இருந்துவிட்டுப் போகலாம்; ஆனால் அது ஓர் எல்லைக்குக் கட்டுப்படுத்தப்பட வேண்டும்.' இந்த எல்லைக்கு மிஞ்சிய உபரியானது, மக்களை நோக்கிப் பாய வேண்டும்; தத்துவ ரீதியாகப் பார்த்தால் மனிதனிடமுள்ள 'தன'த்தையும் சமுதாயத்திலுள்ள 'மற்ற'த்தையும் ஒப்புக் கொள்ளும் அவசியத்தை அவர் வற்புறுத்தினார்; இதில் 'மற்றதன்' பக்கம் அதிகமாக விட்டுக்கொடுக்கும் பொன்னான மார்க்கத்தின் மூலம் அவர் தமது விடையைக் காண முனைந்தார்." (தாகூரின் சமுதாய, பொருளாதார தத்துவம்: கட்டுரை: டாக்டர் ஜே. பி. பட்டாச்சார்ஜி).

ஆம். தாகூர் சோஷியலிஸத்துக்கு ஆதரவான கவிஞர் அல்ல; தனிச் சொத்துரிமையைப் போக்காமல், சோஷியலிஸ லட்சிய சித்தி பூரணமாவதில்லை என்பது சோஷியலிஸ தத்து வம்; நடைமுறைச் சரித்திர அனுபவம். ஆனால் தாகூரோ 'தனக்குப்போகத் தானம் வழங்கும்' பழைய நீதியைத்தான் கூறுகிறார். எனினும் சமுதாயத்தில் 'தனக்குப் போக' என்ற இந்தச் சொல்லுக்கு எது அளவு, அளப்பவர்கள் யார், யாருக்காக அளப்பது என்பதுதான் பிரச்சினை. இறுதியாகச் சொன்னால், தனிச்சொத்துரிமையை ஆதரிக்கவும், சோஷிய லிஸத்தை நிராகரிக்கவும் கூடிய அளவுக்கு, தாகூரிடம் தாம்

பிறந்து வளர்ந்த வர்க்கத்தின் பிடிப்பும், நிலப்பிரபுத்துவ மோகமும், தனிமனிதத்துவமும் மேலோங்கி நின்றன என்றே சொல்லவேண்டும். எனவேதான் தாகூர் எந்த விதமான புரட்சிகரமான நடவடிக்கையையும் ஆதரிக்கவில்லை. ஆனுல் பாரதியோ அத்தகைய நடவடிக்கைகளை வரவேற்றவர். தமது "இந்தியா"ப் பத்திரிகையின் தலைப்பிலேயே பிரஞ்சுப் புரட்சியின் விடுதலை கோஷமான "சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்" என்ற முப்பெருங் கோஷங்களையும் தமது லட்சிய கோஷமாகப் பொறித்தவர். 1909ம் ஆண்டில் துருக்கியில் முடியரசை யொழித்து நிகழ்ந்த புரட்சியை அவர் வரவேற்ருர்; அதனைக் கண்டு சுதந்திர தேவியிடம் தமது நாட்டிலும் அத்தகைய மாற்றத்தைக் கொணர அருள் செய்ய வேண்டும் என்று முறையிடும் விதத்தில் பாரதி பின்வருமாறு பாடினுர் (பாரதி புதையல்—1):

**தொல்லையெலாம் தவிர்த்தெங்கள் கண்காண**
**நொடிப் பொழுதில் துருக்கி மாந்தர்**
**நல்ல பெரும் பதம் காணப் புரிந்திட்டாய்!**

இதனுல்தான் 1917ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ருஷ்ய நாட்டில் முதற்பெரும் சோஷியலிஸ்ட் புரட்சி நடந்து, அது வெற்றி கண்டபோது, பாரதி சிறிதும் தயக்கம், மயக்கம் எதுவுமில்லாமல் அதனை ஆகாகாரமிட்டு வரவேற்றுப் பாடினுர்:

**ஆகா வென்றெழுந்தது பார் யுகப்புரட்சி!**
**கொடுங்கோலன் அலறி வீழ்ந்தான்!**

இவ்வாறு அந்தப் புரட்சியை யுகமாற்றத்தைக் கொணர்ந்த யுகப்புரட்சியாகக் கண்டு,

**இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்!**
**கிருத யுகம் எழுக மாதோ!**

என்று முத்தாய்ப்பு வைத்தார். மேலும் ருஷ்யப் புரட்சியின் வெற்றி பற்றிய பாடலில் அவர்,

**வையகத்தீர்! புதுமை காணீர்!**

எனப்பாடி, அங்கு நிகழ்ந்த புதுமையை வையகத்தார் அனைவரும் கண் திறந்து காணவேண்டுமென வருந்தி யழைத்தார். இவ்வளவுக்கும் பாரதி அந்தப் புரட்சியை இந்திய நாட்டில் இருந்தவாறே செய்திகளின் மூலமே கண்டார்; எனினும் எடுத்த எடுப்பிலேயே அதன் சாராம்சத்தை உணர்வு பூர்வமாகக் கண்டறிந்து கொண்டார். சோவியத் புரட்சியை முதன் முதலில் வரவேற்றுப் பாடிய இந்தியக்கவி பாரதிதான் எனத் தெரிகிறது. ருஷ்யப் புரட்சியை யுகப் புரட்சியாகக் கண்ட காரணத்தால், பாரத சமுதாயத்தை 'வாழ்க வாழ்க' என வாழ்த்தி, ஜெயகோஷமிட முனையும் பாரதி தமது "பாரத சமுதாய"ப் பாட்டில், பாரத சமுதாயம் வாழவேண்டுமானால் அதற்கு எத்தகைய சமுதாய அமைப்பு வேண்டும் என்பதையும் எடுத்த எடுப்பி லேயே,

**முப்பது கோடி ஜனங்களின் சங்கம்**
**முழுமைக்கும் பொதுவுடைமை**
**ஒப்பிலாத சமுதாயம்**
**உலகத்துக் கொரு புதுமை**

எனப் பாடி, வையகத்தை அவர் காண அழைத்த புதுமை, தாம் வாழும் பாரத நாட்டிலும் நிகழவேண்டும் என்று வரையறுத்தார். புரட்சி, பொதுவுடைமை ஆகிய சொல் லாக்கங்களையே தமிழுக்குப் புதிதாக ஆக்கிக் கொடுத்த புண்ணியமே பாரதியைத்தான் சேரும்.

# 8

## பாரதிக்குப்பின் தாகூர்

சோவியத் புரட்சியை வாழ்த்தி வரவேற்றும் பாரத சமுதாயத்துக்கும் பொதுவுடைமை என்னும் ஒப்பிலாத சமுதாயம் வேண்டும் என்ற லட்சியத்தை வரையறுத்தும் பாடிய பாரதி, "பாரத சமுதாயம்" பாடலை எழுதிய அதே 1921-ம் ஆண்டிலேயே மறைந்துவிட்டார். தாகூர் பாரதிக்குப்பின் இருபதாண்டுக் காலம் இவ்வுலகில் வாழும் பாக்கியத்தைப் பெற்றிருந்தார். எனவே பாரதிக்குப் பின்னர் தாகூரை நாம் மேலும் புரிந்துகொள்ள வாய்ப்புண்டு. சோவியத் புரட்சி நடந்து முடிந்த காலத்துக்கு முன்பே, தாகூர் உலகப் புகழ்பெற்ற, நோபல் பரிசுபெற்ற கவிஞராக விளங்கினார். சோவியத் புரட்சிக்கு முன்பே அவர் மேலை நாட்டுக்குச் சென்று வந்தவர். ஏகாதிபத்தியங்களின் நாடு பிடிக்கும் ஆசையும் லாப வேட்டையும் போருக்குக் காரணமாயிருப்பதைக் கண்டவர்; கண்டித்தவர். 1914-18-ம் ஆண்டுகளின் மகா யுத்தத்தின் கோரங்களை அறிந்தவர். மேலும், அந்த யுத்தத்துக்குப் பின்னர் 1921-ம் ஆண்டில் அவர் யுத்தத்தால் பல விதத்திலும் பாதிக்கப்பட்டிருந்த ஜெர்மனி நாட்டுக்குச் சென்றபோது, அங்கு அவருக்குப் பெருத்த வரவேற்புக் கிட்டியது. பெர்லின் சர்வகலாசாலையில் அவர் பேசவிருந்த கூட்டத்தில் ஒரே ஜனக்கூட்டம்; இட நெருக்கடி.

அந்த நெரிசலில் பல மாணவிகள் மயக்கம்போட்டு விழுந்த தாகவும், கூட்டத்தில் மிதிபட்டதாகவும் நாம் அறிகிறோம். அதே ஆண்டில் ஜெர்மானியப் பிரசுரகர்த்தர்கள் தாகூரின் "கீதாஞ்சலி"யை முப்பது லட்சம் பிரதிகள் அச்சடித்து விற்பனை செய்தார்களாம். தாகூர் அங்கு சென்று திரும்பிய ஐந்தே மாத காலத்தில் அவற்றில் எட்டு லட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகி முடிந்ததாம். இது இந்தியர்களான நமக்கெல்லாம் பெருமை அளிக்கும் ஒரு செய்தியாகும். இந்த விவரங்களையெல்லாம் டாக்டர் ஏ. ஆரன்ஸன் தெரிவிக்கிறார். ("மேலை நாட்டார் பார்வையில் ரவீந்திரநாத தாகூர்" ஏ. ஆரன்ஸனின் நூல்). இதே நூலில் தாகூரின் 'கீதாஞ்சலி"க்கு ஜெர்மன் நாட்டில் பெருத்த வரவேற்பு இருந்ததற்குக் காரணம் என்ன என்பதையும் அவர் பலவாறு குறிப்பிடுகிறார். "நீண்ட நெடும், பயனிழந்த ஒரு போராட்டத்துக்குப் பின்னர் விரக்தியுற்றிருந்த ஜெர்மானிய மத்திய தர வர்க்கத்தினர் ஓர் ரட்சகரைக் காண்பதுபோல் அவரை (தாகூரை) நோக்கித் திரும்பினர். இனி எந்தக் காலத்திலும் போரிடுவதில்லை என்ற உறுதியோடு, பிளாண்டர்ஸ் போர் முனையிலிருந்து திரும்பி வந்திருந்த, லட்சோப லட்சக்கணக்கான ஜெர்மன் மத்தியதரவர்க்க மக்களின் கண்களைத் தாகூரின் கவிதையும் செய்தியும் திறந்துவிட்டன" என்றும், "மகாயுத்தத்தைத் தொடர்ந்த ஆண்டுகளில் தனது உச்ச நிலையை எய்திவிட்ட ஐரோப்பியத் தோல்வி மனப்பான்மை தனது சொந்தச் சாதனைகளைப்பற்றிய புனருறுதியையும், புதிய ஆறுதலையும் தாகூரின் எழுத்துக்களில் கண்டது" என்றும் அவர் குறிப்பிடுகிறார். ஆம், தாகூரின் "கீதாஞ்சலி" யிலுள்ள மனிதாபிமானமும், ஆன்ம விசாரமும் அவர்களது கவலையையும் விரக்தியையும் மறக்கச் செய்யும் மருந்தாகப் பயன்பட்டன. தாகூர் யுத்தத்தைக் கண்டித்தபோதிலும், ஏகாதிபத்தியங்களின் பேராசையையும் போர் வெறியையும் கண்டித்தபோதிலும், ஏகாதிபத்தியங்களை ஒழிப்பது பற்றியோ, அதற்கு மாறாகப் புதிய சோஷியலிச சமுதா

யத்தை ஏற்படுத்துவது பற்றியோ பேசவில்லை. எனவேதான் அந்த யுத்தம் முடிவதற்கு முன்பே நடந்து முடிந்து, உலகுக்கெல்லாம் புதிய வழி காட்டிய சோவியத் புரட்சியை அவர் காணவோ, வரவேற்கவோ முன்வரவில்லை.

"யுத்தம் முடிவதில்லை; நிறுத்தி வைக்கத்தான் படுகிறது" என்ற ஏகாதிபத்தியக் கூற்றுக்கு இலக்கணமாக, "இனி எந்தக் காலத்திலும் போரிடுவதில்லை என்ற உறுதியோடு பிளாண்டர்ஸ் போர்முனையிலிருந்து திரும்பி வந்திருந்த" அதே ஜெர்மன் மக்கள் மத்தியிலேயே நாஜி வெறியனான ஹிட்லர் தோன்றி, அங்கு பாஸிஸத்தை வளர்த்து, மீண்டும் ஓர் உலகப் போரைக் கொண்டுவந்து, உலகையே ரணகளமாக்கினான் என்பதும், அந்த ஹிட்லருக்கு ஆதரவாக, இத்தாலிய நாட்டுப் "பாஸிஸ்ட் ஜடாமுனி"யான சர்வாதிகாரி முஸோலினி என்பவனும் தோன்றி வெறியாட்டம் ஆடினான் என்பதும் சரித்திரம். ஆனால் உலகில் தோன்றி வளர்ந்த இந்த பாஸிஸ்ட் பேராபத்தையும் தாகூர் சரிவர உணர்ந்து கொள்ளத் தவறி விட்டார். இதற்கு அவரது இத்தாலிய விஜயமும், அப்போது அவர் தெரிவித்த கருத்தும் உதாரணமாகும்.

இத்தாலிய பாஸிஸ்ட் தலைவனான முஸோலினி தாகூரின் சாந்திநிகேதனுக்கு ஏராளமான புத்தகங்களை இனமாக வழங்கியதோடு, இத்தாலியிலிருந்து இரண்டு பிரபலமான இந்திய வரலாற்று அறிஞர்களையும் அனுப்பி வைத்தான். அத்துடன் தாகூரை அவன் இத்தாலிக்கு விஜயம் செய்யுமாறு அரசாங்கத்தின் சார்பில் அழைப்பும் விடுத்தான். இதற்கு முன்னர் ஓர் அன்னிய நாட்டின் அரசாங்கத் தலைவரிடமிருந்து, தமது நாட்டுக்கு அரசாங்க விருந்தாளியாக வந்து செல்லுமாறு, வேறு எந்தவோர் இந்தியப் பெருமகனுக்கும் அழைப்பு வந்ததில்லை. எனவே தாகூர் அந்த அழைப்பைப் பெருமிதத்தோடு ஏற்று, 1926-ம் ஆண்டில் இத்தாலிக்குச் சென்று, முஸோலினியின் விருந்

தாளியாகத் தங்கினர். ஆனல் தாம் அங்குத் தங்கியிருந்த காலத்திலும், இத்தாலியில் நடந்து வந்த பாஸிஸ ஆட்சியின் தன்மையை அவர் உணர்ந்து கொள்ளவில்லை. அவர் அங்கிருந்தபோது முஸோலினியின் ஆட்சியைப் புகழ்ந்து பேசி விட்டார். இதன்பின்னர் அவர் இத்தாலியிலிருந்து கிளம்பி வெளியேறி, பிரபல பிரஞ்சு நாட்டு எழுத்தாளரான ரோமன் ரோலந்தைச் சந்தித்தார். இது ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சந்திப்பு எனச் சொல்லவேண்டும். தாகூரை நேரில் சந்திக்க வேண்டுமென விரும்பிய ரோலந்தின் நெடுநாள் ஆசை அப்போதுதான் நிறைவேறியது. எனினும் ரோலந்தோ தீவிரமான பாஸிஸ்ட் விரோதி. எனவே தாகூர் முஸோலினியின் விருந்தாளியாக இருந்து, அவனது ஆட்சியைப் புகழ்ந்து பேசிவிட்டு வந்த செய்தி அவருக்குப் புழுக்கம் தருவதாக இருந்தது. எனவே அவர் இத்தாலியில் நடக்கும் பாஸிஸக் கொடுமைகளைப் பற்றியும், இத்தாலியிலிருந்து புகலிடம் தேடி அயல்நாட்டுக்கு ஓடிவந்துள்ள அறிஞர்களையும் எழுத்தாளர்களையும் பற்றியும் தாகூரிடம் பேசினர். பாஸிஸத்தில் அடங்கியுள்ள பயங்கரமான பேராபத்தைத் தாகூரைப் போன்ற அறிஞர் பெருமக்கள் உணரத் தவறுவது அவர்களது பெருமையைக் குன்றச் செய்து விடும் என்று ரோலந்த் கருதினர். எனவே தாகூர் இத்தாலிக்குச் சென்ற நோக்கத்தை விளக்கி, பாஸிஸ ஆட்சி முறையைக் கண்டித்து அறிக்கை விடவேண்டுமென அவர் தாகூரிடம் வேண்டிக்கொண்டார். ஆனல் விருந்தாடிவிட்டு வந்த அரசாங்கத்தைப்பற்றி அதற்குள் மாறுபட்ட கருத்தைத் தெரிவிக்கத் தாகூர் தயங்கினர். எனினும் ரோலந்தும், அவரது நண்பரான ஜார்ஸெஸ் டுகாமெல் என்ற பிரபல பிரஞ்சு எழுத்தாளரும் தாகூரிடம் இதுபற்றி மேலும் மேலும் பேசி, அவரைத் தெளிவுபடுத்த முயன்றார்கள். இறுதியாக, தாகூர் ஒரு பத்திரிகைக்குப் பேட்டியளிப்பதுபோல் பாஸிஸத்தைப் பற்றிய தமது கருத்தை வெளியிடலாம் என்று யோசனை தெரிவித்தார்கள். மறுநாள் தாகூர் அத்தகைய குறிப்பொன்றைத் தயார் செய்தார்.

ஆனாலும், அதிலும் அவர் இத்தாலியில் தமக்களிக்கப்பட்ட வரவேற்பின் "அன்பையும் வியப்பையும்" பாராட்டி யிருந்தார். ஆனால் இத்தகைய அறிக்கையை இத்தாலிய பாஸிஸ்டுகள் தமக்குச் சாதகமாக்க முடியும் என ரோலந்தும், அவரது நண்பரும் அஞ்சினார்கள். எனவே தாகூரை மேலும் தெளிவு பெறச் செய்வதற்காக, இத்தாலியிலிருந்து பிரஞ்சு நாட்டுக்குப் புகலிடம் தேடி வந்துள்ள சில இத்தாலிய அறிஞர்களைச் சந்திக்குமாறு ரோலந்த் கேட்டுக்கொண்டார். அதன்படியே அந்த அறிஞர்களைச் சந்தித்துப் பேசிய பின்னர்தான், தாகூர் பூஜ்யர் சி. எப். ஆண்ட்ருசுக்கும் முஸோலினி தமது சாந்தி நிகேதனுக்கு அனுப்பியிருந்த இந்திய வரலாற்று அறிஞருக்கும் எழுதும் கடிதத்தின் வடிவத்தில் பாஸிஸ்ட் முறைகளைத் தாம் ஒப்புக்கொள்ள வில்லை எனக் குறிப்பிட்டு, "ஒரு மக்களின் மீது சுயாதிக்கம் கொள்வதற்காக, எந்தவோர் அரசியல் கட்சியும் மேற்கொள் கின்ற ஈவிரக்கமற்ற, கொடுமை நிறைந்த ஓர் ஆட்சிக்கு நானும் சம்மதம் அளிப்பது போன்றதொரு நிலைமைக்கு ஆளானது எனக்கு மிகவும் கசப்பாக இருக்கிறது" என்று எழுதினார். மேலும் அந்த இந்திய வரலாற்று அறிஞருக்கு எழுதிய கடிதத்தில் முஸோலினி தம்பால் காட்டிய அன்புக்குத் தாம் நன்றியுடையவராயினும், தாம் ஒரு தவறான சூழ்நிலைக்கு ஆளானதைக் குறித்து வருத்தப்பட்டிருந்தார். இதனைக் குறித்து டாக்டர் ஆரன்ஸன் எழுதிய புத்தகத்தில் பின்வரும் வரிகள் காணப்படுகின்றன. "தாகூர் ஜூரிச்சுக்கு வந்தபோது, அங்கு பாஸிஸ எதிர்ப்புக் கருத்துக்களைப் பரப்பியதற்காக, முஸோலினியால் நாடு கடத்தப்பட்டு வாழ்ந்த ஒரு பிரபல இத்தாலிய அறிஞரைச் சந்தித்தார். கவிஞரும் அறிஞரும், பாஸிஸத்தின் நோக்கம், குறிக்கோள் ஆகியவை பற்றியும், முஸோலினி இழைத்துள்ள இதயமற்ற கொடுமைகளைப் பற்றியும் நெடுநேரம் பேசினார்கள். இதன் பின்னர் கவிஞர் 'மான்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையில் வெளியிட்ட கடிதமொன்றில் முஸோலினியின் கொடுமை களையும், பாஸிஸத்தையும் பகிரங்கமாகக் கண்டித்தார்."

(மேலைநாட்டார் பார்வையில் ரவீந்திரநாத தாகூர்: ஆரன்ஸன்).

தாகூர், ரோலந்த் ஆகிய மேதைகளின் சந்திப்பைப் பற்றி டாக்டர் கிரிஜா முகர்ஜி எழுதியுள்ள மதிப்பீடு அந்தச் சந்திப்பின் முக்கியத்துவத்தை நமக்கு நன்கு விளக்கும். அது வருமாறு: "இந்தச் சந்திப்பு இந்த நூற்றாண்டின் இரு பெரும் சிந்தனையாளர்களின் சந்திப்பு என அடிக்கடி சொல்லப்படுகிறது. ஆனால் நான் இதை ஒரு சாதாரணச் சந்திப்புக்கும் மேலாகக் கருதுகிறேன். இந்தச் சந்திப்பு இந்திய விடுதலை லட்சியத்துக்குத் தமது சிந்தனையையும் சக்தியையும் பெருமளவுக்கு ரோலந்தை அர்ப்பணிக்கச் செய்தது என்பது உண்மைதான்; ஆனால் அதே நேரத்தில், ஐரோப்பாவில் நடந்து வந்த வர்க்கப் போராட்டத்தின் மூர்க்கமான, மிருகத்தனமான யதார்த்தங்களையும், ஒரு குறிப்பிடத்தக்க அளவுக்குக் காணும் விதத்தில் தாகூரின் கண்களையும் திறந்து விட்டது. நமது காலத்தின் பிரச்சினைகளை வெறுமனே சுத்த சுயம்புவான லட்சியவாதத் தன்மையோடு நோக்கும் அவரது கொள்கையினின்றும் அவரை அசைத்து வெளிக் கொணர்ந்தது." (தாகூரும் ரோலந்தும்: டாக்டர் கிரிஜா முகர்ஜி).

தாகூரின் இந்த மனமாற்றம் அவரது சோவியத் யூனியன் விஜயத்துக்கும் அதன் பின்னரும்தான் துலாம்பரமாக வெளிப்பட்டது. 1926-ம் ஆண்டில் ஐரோப்பாவுக்குச் சென்றிருந்த சந்தர்ப்பத்திலேயே, அவர் அங்கு சந்தித்த சோவியத் எழுத்தாளர்கள் சிலரிடம் தாம் ருஷ்யாவுக்கு விஜயம் செய்ய விரும்புவதாகத் தெரிவித்தார். ஆனாலும் 1930-ம் ஆண்டில் தான் அவருக்கு அந்த வாய்ப்புக் கிட்டியது. சோவியத் யூனியன் விஜயத்தின் போது அவர் அங்கிருந்து எழுதிய கடிதங்களில் அவரது மனமாற்றத்தின் முதல் தோற்றமும் தமது தவறுகளின் மீது அவர் கொண்ட கழிவிரக்கமும் வெளிப்பட்டன. இந்தக் கடிதங்கள் முதலில் வங்காளி மொழியில் வெளியிடப் பெற்றன; பின்னர் 1934-ம் ஆண்டில்

'மாடர்ன் ரெவ்யூ' பத்திரிகையின் மூலம் அவை ஆங்கிலத்தில் வெளியிடப் பெற்றன. எனினும் அன்றிருந்த ஆங்கிலேய அரசாங்கம் அவற்றை உடனே தடை செய்து விட்டது. சமீபத்தில் (1961) கொண்டாடப் பெற்ற தாகூர் நூற்றாண்டு விழாவின்போதுதான் அந்தக் கடிதங்கள் மீண்டும் நமது பார்வைக்குக் கிட்டின. அந்த விழாவினை யொட்டி 'சோவியத் நாடு' பத்திரிகை அவற்றை இந்திய மொழிகள் பலவற்றிலும் வெளியிட்டு உதவியது. அவற்றிலிருந்து நாம் இங்கு சில பகுதிகளை மட்டும் பார்ப்போம் :

"இப்போது நான் ருஷ்யாவில் இருக்கிறேன். இங்கு நான் வந்திராவிடில் என் வாழ்க்கையின் தீர்த்த யாத்திரை முற்றுப் பெற்றிருக்காது. இங்குள்ள மக்களின் நடவடிக்கைகளில் நல்லவை, கெட்டவை பற்றிக் கவனித்து மதிப்பிடுவதற்கு முன் என் மனத்தில் தோன்றும் முதல் கருத்து இதுதான்; எத்தகைய நம்பற்கரிய துணிச்சல்!......"

"ஊமைகள் தமது குரலைப் பெற்றுவிட்டார்கள்; பாமரர்கள் தமது மனங்களை மூடியிருந்த திரைகளைக் களைந்து விட்டார்கள்; திக்கற்றவர்கள் தமது சொந்தச் சக்தியைப் பற்றிய உணர்வைப் பெற்றுவிட்டார்கள்; அவல வாழ்வின் அதல பாதாளத்தில் கிடந்தவர்கள் சமுதாயத்தின் 'இருட்டறை'யிலிருந்து வெளிப்பட்டு, ஏனைய எல்லோருடனும் சமத்துவம் கோரிவிட்டார்கள். எட்டாண்டுக் காலத்துக்குள்ளாகவே சோவியத் ருஷ்யா சாதித்த சாதனை இது..."

"எனது கண்களாலேயே நான் நேரில் பார்த்திராவிட்டால், பத்தாண்டுக் காலத்துக்குள்ளாக அறியாமையிலும் அவமானத்திலும் மூழ்கிக் கிடந்த லட்சக்கணக்கான மக்களை, அவர்களுக்குக் கல்வியறிவு போதிப்பதோடு மட்டுமல்லாமல், அவர்களை மனிதத் தன்மையின் கௌரவத்துக்கும் ஆளாக்கியுள்ள ஒரு செயலை நான் என்றும் நம்பியிருக்க மாட்டேன்..."

"முக்கியமான விஷயம் யாதெனில், துயரம் அனுபவித்து வரும் மனித குலம் முன்னைக் காட்டிலும் இன்று உலக அரங்கில் தன்னைத்தானே மேலும் தெளிவாகக் கண்டு கொண்டிருக்கின்றது. ஏனெனில் கடந்த காலத்தில் இவர்கள் தனித்தொதுங்கி தம்முடைய உண்மையான பலத்தைப்பற்றி ஏதும் அறியாமல் இருந்தார்கள். தலைவிதியை நம்பி எல்லாவற்றையும் சகித்துக் கொண்டார்கள். ஆனால் இன்றோ மக்கள் தம்முடைய திக்கற்ற நிலையிலும்கூட, தேவலோகத்தைப் பற்றி—ஒடுக்கு முறை ஒழிந்து தாழ்வும் இழிவும் அற்ற தேவலோகத்தைப் பற்றி—கனவு காண்கின்றனர் இந்த ஒரு காரணத்துக்காகவே ஒடுக்கப்பட்ட மனிதகுலம் இன்று எல்லா இடங்களிலும் குமுறி எழுந்துள்ளது."

சோஷியலிஸம் சாத்தியமானதுதானா என்று சந்தேகப்பட்ட தாகூர், வறுமை ஆண்டவனின் விதியானால், அது இருந்துவிட்டுப் போகட்டும் என்று முன்னர் சலித்துக் கொண்ட தாகூர், இந்தக் கூற்றுக்களின் மூலம் எவ்வளவு தூரம் மனமாற்றம் அடைந்து விட்டார் என்பதை நாம் அறியலாம். மேலும் சோவியத் ருஷ்யாவை விட்டு விடை பெறுமுன், மாஸ்கோவில் அவர் பேசியபோது, "பல நூறு ஆண்டுகளாய்த் தளையிடப்பட்டுக் கிடக்கும் மக்களின் உள்ளங்களை விடுவிக்க வேண்டுமென்ற கனவை, ஸ்தூலமான வடிவில் பார்ப்பதற்கு எனக்கு உதவிசெய்த உங்கள் அனைவருக்கும் நான் நன்றியுள்ளவனுவேன்—உண்மையிலேயே நன்றியுள்ளவனுவேன்!" என்றும் கூறினார். தமது கடிதங்களில் சோவியத் யூனியனைப் பாராட்டும் அதே சமயத்தில், தமது குறைபாடுகள் சிலவற்றையும் அவர் மனம் திறந்து ஒப்புக் கொண்டுள்ளார் :

"காங்கிரஸ் கூட்டங்களில் நமது படித்த வர்க்கத்தினர் இரங்கிப் புலம்புவதும், பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதுவதும்தான் அவர்களின் உண்மையான தேசத் தொண்டாகி விட்டது. பேனு பிடிக்க மட்டும் தெரிந்திருக்கும் நமது

கரங்களால், நாட்டின் தலைவிதியை உருவாக்குவதில் எத் தகைய தொண்டும் செய்ய முடியவில்லை. நானும் இதே சூழ் நிலையில் வளர்ந்தவன். ஆதலால்தான் நமது கோடிக்கணக் கான் மக்களின் நெஞ்சை அழுத்திக் கொண்டிருக்கும் அறியாமை, பலவீனம் எனும் பெரும்பாறையை அகற்றி யெறிவது சாத்தியமே என்று துணிச்சலாகச் சிந்திக்கும் தைரியம் எனக்கில்லை...''

பாடுபடும் மக்களைப் பற்றி அவர் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

''இவர்களைப் பற்றி நான் அடிக்கடி சிந்தித்திருக்கிறேன். ஆனால் இவர்களுக்குக் கடைத்தேற்றம் இல்லையென்ற முடிவுக் குத்தான் நான் வந்தேன். கீழே எவரும் இல்லாவிடில், மேலே எப்படி ஒருவரால் இருக்க முடியும்....என்று நான் நினைப்பது வழக்கம்.''

மேலும் அவர் தமது குறைபாட்டைப் பற்றி ஒரு கடிதத் தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார் : ''எனக்குக் கிட்டத்தட்ட எழுபது வயதாகிறது. ஆனால் இதற்குமுன் நான் பொறுமையை இழந்ததில்லை. நமது நாட்டின் அறியாமை யின் சகிக்க முடியாத சுமையைக் காணும்போது, நான் வேறெதைக் காட்டிலும் நமது தலைவிதியைத்தான் குற்றம் சாட்டி வந்தேன்...''

இத்தனைக்கும் மேலாக, ருஷ்ய விஜயத்துக்குப் பின்னர் அவர் தம் புதல்வருக்கு எழுதிய கடிதமொன்றில் பின்வரு மாறு எழுதியுள்ளார் : ''ஜமீன்தாரி அமைப்பு முறை குறித்து நான் பெரிதும் வெட்கப்படுகிறேன். இன்று என் மனம் மேலிடத்தைவிட்டு இறங்கி, கீழே ஓர் இடத்தைப் பிடித்துள் ளது. எனது குழந்தைப் பருவத்திலிருந்து நான் ஒரு புல்லுருவி யாக வளர்க்கப்பட்டிருக்கிறேன் என்று எண்ணும்போது நான் பெருங்கவலையடைகிறேன்.''

ஆம், ஜமீன்தாரிக் குடும்பத்தில் பிறந்து, அந்த வர்க்கத் தின் நிலப்பிரபுத்துவப் பிடிப்புக்கு ஆளாகியிருந்த தாகூர்

தமது அந்திம காலத்தில்தான் அதனையுணர்ந்து அதற்காக வெட்கப்பட்டார். பண்டித நேரு ருஷ்ய நாட்டைப் பற்றி எழுதும்போது பின்வருமாறு எழுதியுள்ளார் : "மிகுந்த தனி மனிதத்துவ வாதியாக, கம்யூனிஸ்ட் சமுதாயத்தின் சில அம்சங்களின்பால் கவரப்படாதிருந்த தாகூரும்கூட, இந்தப் புதிய நாகரிகத்தைப் போற்றிப் புகழ்பவராக மாறி, அதனைத் தமது சொந்த நாட்டின் இன்றைய நிலைகளோடு வேறுபடுத்திக் காட்டினர்" (இந்திய தரிசனம் : நேரு).

சோவியத் ருஷ்ய விஜயத்துக்குப் பின்னர் தாகூரின் மனப் போக்கிலும் செயலாற்றலிலும் ஒரு பெருத்த, புதிய மாற்றமே ஏற்பட்டது. இந்த மாறுதலை அவரது எழுபதாவது வயதிலிருந்து அவர் காலமான எண்பதாவது வயது வரையுள்ள பத்தாண்டுக் காலத்திலும் நாம் பார்க்க முடிகிறது. இதனைப் பற்றியும் பண்டித நேரு பின்வருமாறு குறிப்பிடுகிறர் : "வளர்ச்சியின் வழக்கமான போக்குக்கு மாருக, அவருக்கு (தாகூருக்கு) வயது ஏற ஏற, அவர் தமது கண்ணேட்டத்திலும், கருத்துக்களிலும் மிகவும் தீவிரமானவராக மாறினர்." (இந்திய தரிசனம் : நேரு).

தாகூரின் கடைசிக் காலமான அந்தப் பத்தாண்டுக் காலத்தில் உலக ரீதியாகப் பல முக்கிய சம்பவங்கள் நிகழ்ந்தன. அவரே ஒரு காலத்தில் உணரத் தவறிவிட்ட பாஸிஸம் கொடிய சொரூபமாக வளர்ந்து விட்டது; இத்தாலிய பாஸிஸ்ட் முஸோலினி அபிசீனியாமீது படையெடுத்தான்; மூனிச் உடன்படிக்கையின் மூலம் செக்கோஸ்லோவேகியா ஹிட்லருக்குப் பலியாயிற்று; ஹிட்லர் உலக யுத்தத்தைத் தொடங்கி வைத்தான்; ஜப்பான் சீனுவின்மீது படையெடுத்தது; ஸ்பெயின் நாட்டில் உள்நாட்டு யுத்தம் தொடங்கியது. இதேபோல் இந்தியாவிலும் பல நிகழ்ச்சிகள். இந்தக் காலத்தில் தாகூரின் அரசியல் கண்ணேட்டம் முன்னெப்போதைக் காட்டிலும் தீக்ஷண்யமும் தீர்க்க தரிசனமும் பெற்றது எந்தவொரு பெரிய அரசியல் நிகழ்ச்சியும் அவரது கவனத்தை விட்டுத் தப்பவில்லை. அந்தச் சந்தர்ப்பத்தில் அவர் பல

அரசியல் கூட்டங்களில் தலைமை வகித்தார்; பல பிரச்சினைகளைக் குறித்துத் தமது கருத்தைத் தெரிவித்தார்; பேச்சுக்கள், கட்டுரைகள், செய்திகள் என்று அலுப்புச் சலிப்பின்றிப் பல விதத்திலும் தமது கருத்துக்களை அவர் இடையறுது வழங்கி வந்தார்.

1930-ம் ஆண்டில் தாகூர் தாம் எழுதிய ''சகாப்த மாற்றம்'' என்ற கட்டுரையில், ஜெர்மானிய, இத்தாலிய பாஸிஸ்டுகள் செய்து வந்த கொடுமைகளையும், அட்டூழியங்களையும் வன்மையாகக் கண்டித்தார். "அரசியல் வேற்றுமை காரணமாக, எதிர்க்கட்சிக்காரர்களைத் தீவாந்தரத்துக்கு நாடு கடத்துவதையும், சிறைப்படுத்துவதையும்" வழக்கமாகக் கொண்டிருந்த இத்தாலிய பாஸிஸ்டுகளையும், " நாகரிகத்தின் மகோன்னதமான லட்சியங்கள் அனைத்தையும் தவிடு பொடியாக்கத் துணியும்" நாஜிகளையும் அவர் கண்டித்தார். அதன் பின்னர் ஸ்பெயின் தேசத்தில் தீரமிக்க உள்நாட்டுப் போராட்டம் நடந்த காலத்தில் அதனையும் வாழ்த்த அவர் தவறவில்லை. அந்த வீரப் போராட்டத்தில் துணை நின்று, ஸ்பெயின் தேசத்து மக்களின் தியாக வேள்வியில் தமது ஆவியைப் பறிகொடுத்த பிற நாட்டு வீரர்களையும் அவர் தமது "நாகரிகத்தின் நெருக்கடி" என்ற கட்டுரையில் போற்றிப் புகழ்ந்தார். 1938-ம் ஆண்டில் ஜப்பானியக் கவிஞரான யோனே நோகுச்சி என்பவருக்கு எழுதிய கடிதத்தில், மேற்கத்திய ஏகாதிபத்தியங்களின் செல்லப் பிள்ளையாக விளங்கிய ஜப்பானிய பாஸிஸ்ட் அரசாங்கத்தின் போர் வெறியைத் தாகூர் கண்டித்து எழுதினுர். மேலும் அத்தகைய படுமோசமான போக்கை எதிர்த்து, ஜப்பானிய நாட்டு எழுத்தாளர்களும், கலைஞர்களும், கவிஞர்களும் குரல் கொடுக்காதிருந்த நிலைமையை அவர்களுக்கு இடித்துக்காட்டி அவர் அறிவுரை புகன்றுர். அந்தக் கடிதத்தில் ஒரு பகுதி வருமாறு :

"சீனுவிலுள்ள ஜப்பானியக் கலாசாரப் பிரதிநிதிகள் மனித வர்க்கத்தைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கும் ஒரு ஸ்தாபனத்தின்கீழ் சிக்கிக் கொண்டுள்ள எண்ணற்ற மக்களின்மீது தமது கைவரிசையைச் சுறுசுறுப்போடு காட்டி வருகிருர்கள்...ஆனுல் ஜப்பானிலிருந்தும், ஜப்பானிலுள்ள கவிஞர்களிடமிருந்துட்கூட, இதுவரையிலும் எந்த விதமான கண்டனக் குரலும் எழவில்லை...இத்தகைய கருத்துக்களைக் கொண்டுள்ள உங்கள் நாட்டு அறிவாளிகளை, உங்கள் அரசாங்கம் தமது கருத்துக்களையெல்லாம் சொல்வதற்கான 'சுதந்திரத்'துடன் விட்டு வைத்திருக்கிறது என்பதைக் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. அவர்கள் 'சுதந்திரத்தை' அனுபவிக்கிருர்கள் என்றே நம்புகிறேன்! அத்தகைய சுதந்திரத்திலிருந்து விடுபட்டு, வாழ்க்கையின் நம்பிக்கை மிகுந்த எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனைகாரத்தில் மூழ்குவதற்காக, 'நத்தைக் கூட்டுக்குள்' தம்மைத் தாமே இழுத்துக் கொள்ளும் காரியம் ஒரு தேவையற்ற செயலாகவே எனக்குப் படுகிறது.' மாறுதலுக்காகவேனும் அப்படிச் செய்ய வேண்டும் என்று நீங்கள் ஜப்பானியக் கலைஞர்களுக்கு உபதேசம் செய்தால்கூட, எனக்கு இவ்வாறுதான் தோன்றுகிறது. கலைஞனின் கடமைக்கும், அவனது ஒழுக்க பூர்வமான மனச்சாட்சிக்கும் இடையிலே எந்தவிதமான வேற்றுமையையும் என்னுல் ஏற்றுக்கொள்ள முடியாது."

பாஸிஸ்ட் அரசாங்கத்தின் நாசப் போக்கு கொடி கட்டிப் பறந்த காலத்தில், அதனைக் கண்டிக்காத ஜப்பானியக் கலைஞர்களைத்தான் "நத்தைக் கூட்டுக்குள் உங்களை இழுத்துக் கொள்ளாதீர்கள்" என்று தாகூர் கண்டித்தார். ஆனுல் பாரத நாட்டில் தேசிய இயக்கம், தீவிரமெய்தி விரிந்து பரந்து சூடேறிய காலத்தில், தமது தனி மனிதத்துவப் பிடிப்பினுல் தாகூரே, தம்மைத் தாமே "நத்தைக் கூட்டுக்குள் இழுத்து" சாந்திநிகேதனில் ஒதுங்கிப் போயிருந்தார் என்பதை நாம் முன்னர்

பார்த்தோம். அந்த 1908-ம் ஆண்டுத் தாகூருக்கும், 1938-ம் ஆண்டில் ஜப்பானியக் கலைஞர்களுக்குப் புத்திமதி சொல்லும் தாகூருக்கும் நாம் எவ்வளவு பெரிய மாற்றத்தைக் காண்கிறோம்!

அதே ஆண்டில் அவர் உலகில் மேலோங்கி வந்த போர் வெறியைக் கண்டு "ஒரு கேள்வி" என்ற தலைப்பில் ஓர் அருமையான கவிதையும் எழுதினார். அந்தக் கவிதையில் அவர் ஆண்டவனை நோக்கிப் பின்வருமாறு கேட்டார்.

"என் குரல்வளை நெரிக்கப்படுகிறது; என் புல்லாங்குழல் ஊமையாகிவிட்டது; எனது உலகம் சுருங்கிவிட்டது; கன்னங்கரிய இருள் மூட்டமென்னும் பேய்க் கனவில் அது மூழ்கிவிட்டது.

"எனவே நான் கண்ணீரோடு இந்த அவசரமான கேள்வியை உம்மிடம் கேட்கிறேன். நீர் சிருஷ்டித்த காற்றை, நீர் சிருஷ்டித்த ஒளியை மூடி மறைப்பவர்களை உம்மால் மன்னிக்க முடியுமா? உமது அன்பை அவர்களுக்கு வழங்க முடியுமா?"

இவ்வாறு கேட்டு அவர் சமாதானத்தின் அவசியத்தை உணரும்படி மனித சமுதாயத்தின் மனச்சாட்சியைத் தூண்டிவிட்டார்.

வெளிநாட்டுப் பிரச்சினைகளில் கவனம் செலுத்தி, அவை பற்றிப் பல கருத்துக்களைத் தெரிவித்தது போலவே, தாகூர் தமது கடைசிக் காலத்தில் பாரத நாட்டுப் பிரச்சினைகளிலும் தமது கருத்துக்களைத் தெரிவித்தார்! அரசியலிலும் அவர் கவனம் செலுத்தினார். 1931-ம் ஆண்டில் ஹிஜிலி என்ற இடத்திலுள்ள பாதுகாப்புக் கைதிகளின் சிறை முகாமில் இரண்டு வங்காள இளைஞர்கள் குண்டுக் காயம் பட்டு மடிந்து போனார்கள். அந்தத் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்து நடந்த கூட்டத்துக்குத் தாகூரே தலைமை தாங்கிப் பேசினார். அதே ஆண்டில் அந்தமானிலுள்ள அரசியல் கைதிகள் உண்ணாவிரதம்

இருந்தார்கள். அந்தக் கைதிகளை விடுவிக்கக் கோரி, வங்காளக் கவர்னருக்கு அனுப்பிய மகஜரில் தாகூரே முதல் நபராகக் கையெழுத்திட்டார். மேலும் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம், மாகாண சுயாட்சி முதலிய பிரச்சினைகள் குறித்தும், அவர் தமது முற்போக்கான கருத்துக்களைத் தெரிவித்தார்; அரசாங்கத்தின் அடக்குமுறை நடவடிக்கைகளை அவர் கண்டனம் செய்தார். காந்தியடிகளின் சோதனை மிக்க காலத்தில் அவருக்குத் துணையாக நின்றார். இவ்வாறு பல விஷயங்களிலும் கவனம் செலுத்தி, அவற்றில் உணர்வு பூர்வமாகப் பங்கெடுக்க அவர் முன் வந்தார். அவர் காலமாவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னர் (ஜூன், 1941), மிஸ் எலினோர் ராத்போன் என்ற ஆங்கிலேயப் பெண்ணொருத்தி இந்திய நாட்டைப்பற்றி இழிவாகக் குறிப்பிட்ட போதும், அவரது தர்மாவேச உணர்ச்சி அவளுக்குப் பதிலளிக்கத் தவறவில்லை. அவர் அவளுக்கு எழுதிய பகிரங்கக் கடிதத்தில்—இந்தியாவில் ஆங்கிலேயர் இழைத்த கொடுமையைப் பற்றிய அவரது சரித்திரப் பிரசித்தி பெற்ற பிரகடனமான அந்தக் கடிதத்தில்—அவர் பின்வருமாறு எழுதினார் :

"இரு நூற்றாண்டுக் காலத்துக்கும் மேலாக எங்கள் நாட்டின் மூலாதாரச் செல்வங்களைச் சுரண்டிக் கொழுத்த தல்லாமல், எங்கள் நாட்டு ஏழை மக்களுக்கு பிரிட்டிஷ் ஆட்சி என்னத்தைச் சாதித்துவிட்டது?...இரு நூற்றாண்டுக் கால ஆட்சிக்குப் பின்னரும், இந்திய நாட்டிலுள்ள கிராம மக்களுக்குக் குடிதண்ணீர் வசதிக்குக்கூட வழி செய்து கொடுக்காததுதானே, ஆங்கிலேயர்கள் இந்தியர்களை நாகரிகப்படுத்திய லட்சணம்?"

இத்தனைக்கும் மேலாக அவர் காலமாவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்னால் தமது எண்பதாவது பிறந்த தினத்தன்று அவர் உலகுக்கு விடுத்த செய்தி — "நாகரிகத்தில் நெருக்கடி" எனப்படும் அவரது அந்தக் கடைசிச் சாசனம்—உலகில் நிகழ்ந்து வந்த நிகழ்ச்சிகளைக் குறித்து,

கசப்பும் கைப்பும் நிறைந்த வார்த்தைகளைக் கொண்டிருந்த போதிலும், மனித குலத்தின்மீது அவர் கொண்டிருந்த உறுதி யான நம்பிக்கையைப் பிரதிபலிப்பதாக இருந்தது. அந்த அற்புதமான சாசனத்தில் அவர் பின்வருமாறு எழுதியுள்ளார்:

''காட்டுமிராண்டித்தனத்தின் பைசாசம் தனது மாய் மாலத்தையெல்லாம் கைவிட்டுவிட்டது; அது ஒளிவு மறைவற்ற விஷப் பற்களோடு, அழிவின் கோலைக் கூத்தொன்றில், மனித குலத்தையே கிழித்தெறியத் தயா ராகிவிட்டது. உலகத்தின் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரையிலும் பகைமையின் நச்சுப் புகைத்திரள் ஆகாயத்தை இருளடிக்கின்றது. மேலை நாட்டின் மனோபாவத்தில் ஒரு வேளை இத்தனை காலமும் உள்ளடங்கிக் கிடந்த பலாத்கார உணர்ச்சி ஒரு மட்டும் தன்னைத் தானே உசுப்பியெழுப்பிக் கொண்டு, மனிதனின் உணர்ச்சியைக் கறைப்படுத்தி விட்டது.

''விதியின் சக்கரம் என்றாவது ஒரு நாள் தமது இந்திய சாம்ராஜ்யத்தைக் கைவிடும்படி ஆங்கிலேயரை நிர்ப் பந்திக்கத்தான் செய்யும். ஆனால் அவர்கள் எத்தகைய இந்தியாவை, எத்தகைய மோசமான துயரத்தை விட்டுச் செல்வார்கள்? நூற்றாண்டுக் கால நிர்வாகமான அவர்களது சிற்றாறு இறுதியாக 'வற்றி வறளும்போது, அவர்கள் எத்தகைய சேற்றையும், குப்பைகளையும் விட்டுச் செல்வார்கள்! ஐரோப்பாவின் இதயத்திலிருந்து நாகரிக ஊற்றுக்கள் பொங்கிப் பெருகும் என்று நான் ஒரு காலத்தில் நம்பினேன். ஆனால் இன்றோ, இந்த உலகத்தைவிட்டு நான் செல்லவிருக்கும் இந்த நேரத்திலோ, அந்த நம்பிக்கை முற்றிலும் அற்றுப் போய்விட்டது.

''நான் சுற்றுமுற்றும் பார்க்கின்றபோது, ஒரு பெருமை மிகுந்த நாகரிகத்தின் பொடிந்து சரியும் இடிபாடுகள், வீணான பெருங்குவியலாகச் சிதறுண்டு கிடப்பதைக் காண் கிறேன். என்ற போதிலும், மனிதனிடத்தில் நம்பிக்கை இழக்கும் படுபாதகத்தை நான் செய்யமாட்டேன். படுநாசம்

முடிந்த பிறகு, சேவை, தியாகம் ஆகிய உணர்ச்சிகளால் சூழ்நிலை சுத்தமாக்கப்பட்ட பிறகு, ஒரு புதிய அத்தியாயம் தொடங்கப் பெறுவதையே நான் எதிர்பார்ப்பேன். ஒருவேளை அந்த உதய காலம் இந்த அடிவானத்திலிருந்து, அதாவது சூரியன் உதயமாகும் கீழைத் திசையிலிருந்து தோன்றக்கூடும். முறியடிக்கப்படாத மனிதன் எல்லாவித மான தடைமுடைகளையும் பொருட்படுத்தாமல், இழந்து போன தனது மானிட பாரம்பரியத்தைத் திரும்பப் பெறுவ தற்காக, மீண்டும் தனது வெற்றிப் பாதையில் நடைபோடும் நாள் வரத்தான் செய்யும்."

இத்தகைய மகத்தான சாசனத்தை வெளியிட்டு, மனித குலத்தின்மீது அசையாத நம்பிக்கை தெரிவித்து, உலகுக்கும் மனித குலத்துக்கும் நம்பிக்கையூட்டிய தாகூர் இதன் பின்னர் 1941-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 7-ம் தேதியன்று அமரராகி விட்டார்.

# 9

## முடிவுரை

கூட்ட மனோபாவத்தைக் குருட்டுச் சக்தியென ஒரு காலத்தில் கருதிய தாகூர், அதே மனிதக் கூட்டத்தின்மீது, மனித குலத்தின்மீது எத்தகைய நம்பிக்கையை இறுதிக் காலத்தில் வளர்த்துக் கொண்டார் என்பதை நாம் மேலே பார்த்தோம். சோவியத் யூனியனுக்குச் சென்று வரும் போதே, தாகூர் தமது நிலப்பிரபுத்துவத் தளையையும் அவமான உணர்ச்சியோடு களைந்தெறிந்தார் என்பதையும் பார்த்தோம். இதன்பின் அவர் தமது "தந்தக் கோபுர"த் தினின்றும் வெளிப்பட்டு, அரசியல், சமூக, சமுதாய நிகழ்ச்சி களில் தீவிர அக்கறை காட்டியதையும் பார்த்தோம். இதற்கும் மேலாக, அவர் தமது இறுதிக் காலத்தில், தமது தனி மனிதத்துவத்தின் போலிப் பெருமையையும் கைவிட்டு,

சாதாரண மக்களோடு இணைந்து பிணைந்து நிற்க விருப்பம் கொண்டார். தாகூரின் இந்தக் கடைசிக்கால மனமாற்றம் பற்றி எஸ். கே. போஸ் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

“மிகவும் குறிப்பிடத் தக்கது என்னவென்றால், மனிதனை — அதாவது சாதாரண மனிதனையும், ஜன சமூகத்தையும்—பற்றிய அவரது மனப்போக்கில் ஏற்பட்ட புதிய மாற்றம்தான். மனிதன் என்பவன் அவருக்கு இனியும் ஒரு சூட்சுமார்த்தமான இயல்போடு தோன்ற வில்லை. அவன் எதார்த்தமானவனாகவும், ஏறத்தாழ அவனது சமுதாயச் சூழலில் துடிப்பாக நிற்பவனாகவும் தோற்றுகிறான். சாதாரண ஆணும் பெண்ணும் முன்னைக் காட்டிலும் துடிப்பான வரி வடிவத்தில் தோற்றுகிறார்கள்; குணம்சத்தையும் பெறுகிறார்கள். பணிவுள்ள குமாஸ்தா, எந்தவிதப் பம்மாத்துக்களுமற்ற சாதாரணமான குமரிப் பெண், வீடு வாசலற்ற அனாதை, மற்றும் கவனிப்பும் பிரபலமுமற்ற மனிதர்கள் முதலியோரெல்லாம் கவிஞரின் உள்ளத்தில் ஆழ்ந்த பரிதாப உணர்ச்சியை எழுப்பு கின்றனர். நிலத்தை உழுவோன், மீன் பிடிப்போன், படகோட்டி மற்றும் இத்தகைய அனாமதேய மனிதர்கள் எல்லாம், தத்துவார்த்தத்தில் வேறு விதமான அக்கறை கொண்டிருந்த அவரது கவனத்தைக் கவர்கின்றனர். பெருந்தன வர்க்கம் எனச் சொல்லப்படும் மதிற்சுவரினால் மனிதனின் இந்த விரிந்து பரந்த பொதுத் தன்மையிலிருந்து, தமது வாழ்நாளின் பெரும் பகுதிக் காலம் வரையிலும், தாம் வெட்டிப் பிரிக்கப்பட்டிருந்ததையுணர்ந்து, கவிஞர் வெளிப் படையாகவே வருந்துகிறார். அவரது மனிதாபிமானம் மேலும் மேலும் அழுத்தமான ஒரு வண்ணத்தைப் பெறு கின்றது.” (குருதேவர்: இறுதிக்காலம்—எஸ். கே. போஸின் கட்டுரை).

ஆம். தாகூர் ‘கீதாஞ்சலி’யில் கோவில் குருக்களை நோக்கி, “எங்கே உழவன் கட்டாந்தரையைப் பிளந்து உழுகின்றானோ, எங்கே சாலை அமைப்பவன் சரளைக்கல்

உடைக்கின்றனரோ, அங்கேதான் இருக்கிறான் ஆண்டவன். அவன் அவர்களோடு வெயிலிலும் மழையிலும் சேர்ந்து நிற்கிறான். உனது புனிதமான அங்கியைக் களைந்துவிட்டு, அவனைப் போலவே பூமிப் புழுதிக்கு இறங்கி வா...... உன்னுடைய ஆடைகள் கிழிந்தும் கறை படிந்தும் போனால் என்ன மோசம் வந்துவிட்டது? அவனை வந்து பார். உனது உழைப்பிலும் நெற்றி வியர்வையிலும் அவனோடு இணைந்து நில்'' (பாடல் : 11) என்று பாடியதை நாம் முன்னர் பார்த்தோம். ஆனால் கோவில் குருக்களுக்கு இவ்வாறு உபதேசம் செய்த தாகூர் மட்டும் அந்தப் பூமிப் புழுதியில் இறங்கி வரவோ, அந்தச் சாதாரண உழைப்பாளி மகனோடு இணைந்து நிற்கவோ வெகுகாலம் துணியவில்லை. அவர் தம்மிடமிருந்த இந்தக் குறையைத் தாமே ஒரு பாட்டில் ஒப்புக் கொண்டும் இருக்கிறார். ''உமது திருப்பாதங்களுக்கான கால்மணை இதே இருக்கிறது. உமது திருப்பாதங்கள் ஏழைப் பட்டவர்களும், தாழ்த்தப்பட்டவர்களும், திக்கற்றவர்களும் வாழ்கின்ற இடத்திலே தரித்து நிற்கின்றன'' என்று பாடிய தாகூர், அதே பாட்டில், ''நான் உம்மை வணங்க முயலும் போது, எனது பணிவானது ஏழைப்பட்டவர்கள், தாழ்த்தப் பட்டவர்கள், திக்கற்றவர்கள் ஆகியோரின் மத்தியிலுள்ள உமது திருப்பாதங்கள் உள்ள இடத்தை எட்டுமளவுக்குத் தாழவில்லை. ஏழைப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள் ஆகியோரோடு கந்தலான உடைகளைத் தரித்து நடக்கும் உம்மை, பெருமையுணர்ச்சி என்றும் எட்ட முடியாது. எனவே ஏழைப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்ட வர்கள், ஒடுக்கப்பட்டவர்கள் ஆகிய துணையற்றவர்களுக்குத் துணையாக இருக்கும் உம்மை வந்தடையும் வழியை எனது இதயம் என்றும் காண முடியாது'' (கீதாஞ்சலி: பாடல். 10) எனக்கூறி, தமது நிலப்பிரபுத்துவப் பெருமையையும், தனி மனிதத்துவத் தன்மையையும் தம்மையறியாமலேயே அவர் ஒப்புக் கொண்டுள்ளார். எனவேதான் ஆரம்பத்தில் நாம் தாகூரின் மனிதாபிமானம் அறிவு பூர்வமானது என்றும், பாரதியின் மனிதாபிமானம் உணர்வு பூர்வமானது என்றும்

குறிப்பிட்டோம். அறிவு பூர்வமான இந்த மனிதாபி மானத்தை, தாகூர் தமது இறுதிக் காலத்தில்தான் உணர்வு பூர்வமான மனிதாபிமானமாக மாற்றிக் கொண்டார். ஏனென்றால் சோவியத் யூனியனுக்குச் சென்று வருவதற்கு முன்னர், அவர் உழைத்து வாழும் வர்க்கமும், ஓய்வும் வசதியும் பெற்ற வர்க்கமும் உலகத்தில் இருக்கத்தான் செய்யும், இருக்கவேண்டும் என்ற கருத்தையே ஆதரித்தார். ஆனால் அவரது இந்தக் கருத்தும் மனப்பான்மையும் கடைசிக் காலத்தில் அவரிடத்தில் மாறிவிட்டன; மறைந்துவிட்டன. சாதாரணப் பொதுமக்களோடு இணைந்து பிணைந்து பூரணமாக நிற்கத் தவறிவிட்ட, இனிமேல் நிற்பதற்கும் அவகாசமற்ற நிலையில், அவர் தம் இறுதிக் காலத்தில் அதனைக் குறித்துப் பெரிதும் வருந்தினார். இந்த வருத்தத்தைப் புலப் படுத்தி, "மகாகீதம்" என்ற தலைப்பில் அவர் ஒரு நீண்ட கவிதை எழுதினார். அதில் ஒரு புதிய கவிஞனை, புரட்சிக் கவிஞனை, மக்கள் கவிஞனை, எதிர் நோக்கி அறைகூவல் விடுத்தார்; தமது குறைபாட்டை எடுத்துக்கூறி அதனை நிறைவு செய்து தோன்றும் புதிய கவிதைத் தோன்றலுக்கு அவர் வரவேற்புக் கூறினார். அந்த நீண்ட கவிதையின் ஒரு பகுதியை மட்டும் நாம் இங்கே பார்ப்போம்:

"என் கவிதை எங்கெங்கு குறைபாடு கொண்டுள்ளது என்பதை—நான் அதில் எங்கு தவறியுள்ளேன் என்பதை—நான் அறிகிறேன். எத்தனை எத்தனையோ திசைவழியாக அவை திரிந்திருந்தாலும், அவை எல்லா மக்களையும் போய் எட்டத் தவறிவிட்டன என்பதை நான் காண்கிறேன்.

"எனவே நான் இங்கே பூமிப்புழுதியிலிருந்து தோன்றும் ஒரு கவிஞனின் செய்தியை எதிர் நோக்கிக் காத்திருக்கிறேன். விவசாயியின் கவிஞனை, அவனது தோழனை, உண்மையான ஒருமைப்பாட்டை உருவாக்கும் சொல்லையும் செயலையும் கொண்ட கவிஞனை, நான் எதிர் நோக்கி நிற்கிறேன்.

"அவனது வாசகங்கள் மானுட உறவை வெளிப்படுத் தட்டும்! அவனது கவிதை கண்ணை மட்டும் மயக்குவதா

இல்லாமல் விளங்கட்டும்! அதே போல் ஏமாற்றம், மூடு மந்திரமும் இல்லாத கவிதையாக இருக்கட்டும்! என்னிடம் இல்லாத திறமையை அவன் வழங்கட்டும்! அவன் பாசாங்கிலிருந்தும் பசப்பிலிருந்தும் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளட்டும்! அவன் உழைப்பாளி மக்களுக்குத் தன் இதயாபிமானத்தை வாரி வழங்கட்டும்...!

"எண்ணற்ற மக்களின் கவியான அந்தப் புதுமைக் கவியே! நீ வருக! உன் வரவு நல்வரவாகுக! நீ அனுமதேயமான, சாதாரண மனிதனின் பாடல்களைப் பாடு! அவனது ஊமையான, வாய் பேசாத இதயத்திலே ஒளி பாய்ச்சு!..."

ஆம். தாகூர் தமது இறுதிக் காலத்தில், தாம் காலமாவதற்குச் சில மாதங்களுக்கு முன்னால், 1941-ம் ஆண்டு ஜனவரி 21-ம் தேதியன்று எழுதிய இந்தக் கவிதையில், சாதாரண மனிதனின் கவிஞனை, தம்மிடம் இல்லாத திறமையை வழங்கக்கூடிய கவிஞனை, எண்ணற்ற மக்களின் இதயக் குரலாக விளங்கக் கூடிய புதுமைக் கவிஞனை, புரட்சிக் கவிஞனை 'வருக! வருக!' என்று வாய்விட்டு வருந்தி அழைத்தார். ஆனால், அவர் விரும்பிய அத்தகைய கவிஞனொருவன் அவர் பிறந்த பாரத மண்ணிலேயே, அவர் பிறந்த காலத்துக்கு இருபதாண்டுக் காலம் பின்னதாகப் பிறந்து, அவர் உயிர் வாழ்ந்த, காலத்திலேயே தானும் உயிர் வாழ்ந்து, அவர் தமது இறுதிக் காலத்தில் விரும்பி வேட்ட கவிதைகளை அவன் தன் கவிதா வாழ்க்கைக் காலம் முழுவதிலும் வாரி வழங்கி விட்டு, அவர் காலமாதற்கு இருபதாண்டுக் காலத்துக்கு முன்பே, அற்பாயுளில் இந்த உலகத்தை விட்டு மறைந்து விட்டான் என்ற உண்மையையோ, அந்தக் கவிஞன் ஒரு தமிழ்க் கவிஞன் என்பதையோ, அவன் பெயர் பாரதி என்பதையோ, தாகூர் தம் ஆயுட் காலம் முழுவதுமே அறிந்து கொள்ளவில்லை!

———

